

பிறந்தது 1866௵ — காலம்சென்ற ஶ்ரீமான் ஆரணி-குப்புசாமி முதலியார். — இறந்தது 1925௵

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | இரக்தாட்சி௵ மாசிமீ ௧உ | பகுதி |
| --- | --- | --- |
| 10 | 1925௵ பிப்ரவரிமீ 12உ | 8 |


## கடவுள் வணக்கம்.

வாராதெ லாமொழிய வருவனவெ லாமெய்த
மனது சாக்ஷியதா கவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர ஆகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன் றெனப்
போதநெறி தந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதருளின்னு மின்னும்
நின்னையே துணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்க வருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே. (1)

வையக மாதர் சுகத்தையும் பொன்னையு மாயைமல
மெய்யையு மெய்யென்று நின்னடி யார்தம் விவேகத்தையு
மையமில் வீட்டையு மெய்ந்நூலை யும்பொய்ய தாகவெண்ணும்
பொய்யர்தந் நட்பை விடுவதென் றோபரி பூரணமே. (2)

அளியுங் கனியொத் தருவினை யானொந் தயர்வுறுவேன்
தெளியும் படிக்குப் பரிபாக காலமுஞ் சித்திக்குமோ
வொளியுங் கருணையு மாறாத வின்பமு மோருருவாய்
வெளிவந் தடியர் களிக்கநின் றாடும் விழுப்பொருளே. (3)

## அருப்பொருள் விளக்கம்.

1. வாராதெலாம் ஒழிய=பிராரப்தப் பயன்படி நமக்குக் கிட்டாத போகங்கள் எல்லாம் போகட்டும்.

வருவன எலாம் எய்த=கிடைக்கும் போகங்களெல்லாம் வரட்டும் என்று

மனது சாக்ஷியதாக=மனம் இரண்டிற்கும் பொதுவாய்ச் சாக்ஷிமாத்திரமாக

மருவநிலை தந்ததும்=பொருந்தி நிற்கும் நிலையை யருளியதும் (நின்னது அருளே என்றபடி.)

("பிராரப்தத்தின்படி நாம் அனுபவிக்க வேண்டிய சுகதுக்காதி போகங்களில் விருப்பின்படி கிடைக்கும் போகங்களுக்கு மகிழ்வெய்தலும், கிடைக்காதவற்றிற்கு வாட்டமுறுதலுமின்றி இரண்டிலும் உபேக்ஷையாய்ச் சாக்ஷிமாத்திரமாய் நிற்கும் தாக்கற்ற நிலையை யருளியது ஈசுவரனே நின்னருளே" என்றார். ஞானி அத்தகைய நிலையில் நிற்கவேண்டுமென்று அறிவுறுத்தியபடி. அதிலும் நின்னருளே என்பதால் அப்படி நின்றது என் செய்கை என்ற அகங்காரமின்றி எல்லாம் அவன் செயல் என்று செயலற்றிருக்க வேண்டும் என்றும் குறிப்பித்தபடி).

வேதாந்த சித்தாந்த மரபு சமரசமாகவே—ஊகமது தந்ததும்=(ஜகஜீவ பரம் மூன்றும் அநித்தியம் பிரம்மம் ஒன்றுமே சத்தியம் என்ற) வேதாந்த மரபும், (பதிபசுபாசம் மூன்றும் நித்தியம் என்ற) சித்தாந்த மரபும் அனுபவத்தில் சமரசமேயாகும் என்றுணரும் ஊகத்தினை யளித்ததும் (நின்னதருளே என்றபடி)

பொய் உடலை நிலையன்றெனை=அநித்தியமாகிய இத்தேகம் நிலையாயிராமல் எந்த நிமிடத்திலோ நீங்கிவிடக்கூடியதென்று உணரும்.

போதநெறி தந்ததும்=ஞானமார்க்கத்தை யளித்ததும் (நின்னதருளே என்றபடி).

சாசுவத ஆனந்த போகமே=நிலையான ஆனந்த அனுபவமே.

வீடு=மோக்ஷம்.

நீராளமாய் உருக=நீரைப்போல் (மனம் கசிந்து) உருகும்படி.

உள்ளன்பு=அந்தரங்கபக்தி.

இன்னுமின்னும்=மென்மேலும்.

ஒரு நினைவு சற்றுண்டாகிலோ=உனது திருவுளத்தில் சொற்ப எண்ணம் உதித்தாலோ.

மோனமே யிடைவிடாப்பற்றாக நிற்கவருளாய்=(மனம் வாக்கு தற்போதம் யாவும் ஒடுங்கிய) மோன நிஷ்டையிலேயே அடியேன் விடாது நிலைத்து நிற்குமாறு அருள்புரிய வேண்டுகிறேன்.

**வேதாந்தம் சித்தாந்தம் இரண்டுமொன்றே.**

உலகில் சிலர் வேதாந்தம்தான் சரியான மார்க்கமென்றும், சிலர் வேதாந்தம் தவறு சித்தாந்தமே சரியான மார்க்கமென்றும் இருகட்சியாகப் பிரிந்து ஒருவருக்கொருவர் கோரமாய் வாதாடிப் போர்புரிகின்றனர். இவர்கள் போருக்கு ஒரு முடிவில்லை. அது எப்படி முடிவடையும்? இருவர்கூற்றில் ஒருவர் கூற்று மட்டும் உண்மையாகவும் மற்றவர் கூற்று பொய்யாகவுமிருந்தால் அன்றோ அவ்வாதத்திற்கு ஒரு முடிவுண்டாகும். வேதாந்த மார்க்கத்தை யனுசரித்து அனேகம் பெரியோர் முத்தியடைந்துள்ளார்கள். அப்படியே சித்தாந்த மார்க்கத்தை யனுசரித்து அனேகம் பெரியோர் முத்தியடைந்துள்ளார்கள். இந்த இருகட்சியினரும் முத்தியடைந்த துண்மையே யென்பதை நம்மவர் அனைவருமே யொப்புக்கொள்கின்றனர். ஆனல் "அப்படியிருக்க எப்படி ஒன்றுமட்டும் சரியான மார்க்கமாகவும் மற்றொன்று தவறான மார்க்கமாகவும் இருக்கக்கூடும்?" என்பதை மேலே குறித்த வாதுபுரிவோர் சிந்திப்பதில்லை. அதைச் சிந்தித்தாலே நமது ஊகத்திற்கு இரண்டும் சரியே என்ற உண்மை புலப்படுமன்றோ? பாசம் ஒழியாவிட்டால் முத்திகிட்டாது. பாசம் ஒழிந்தால் ஆன்மாவிற்குப் பசுவென்ற பெயரும் போகும்—இதனல் "பதி" அநாதி நித்தியம் "பசு பாசங்கள்" அநாதியாயினும் அநித்தியம் என்னப்பட்டது. இது முத்தியில் உள்ள நிலைமை.

எந்த ஆன்மா முத்தியடைகிறதோ அந்த ஆன்மாவிற்கு மட்டுமே பாசம் நீங்கும். மற்றபடி ஈசனது பஞ்சகிருத்தியமுள்ளளவும் உலகில் பசுபாசங்கள் இருந்துகொண்டேதா னிருக்கும். இந்த நிலையில் நோக்கும்போது மூன்றும் நித்தியமே.

பாசம் எப்போது ஒருகாலத்தில் ஒழிகிறதோ அதை நித்தியம் எனல் பொருந்தாது.

" பதிபசு பாச மூன்றும் பகுத்தறிந் தவரே முத்தர்
பதியொன்றும் பற்றா தாகும் பசுவொன்றைப் பற்றி நிற்கும்
பதிமுகந் தெரியா வண்ண மறைப்பது பாச மாகும்
பதிகுரு வான ஞான்று நீங்குமப் பாசந் தானே."

(வள்ளலார்-பதிபசுபாச விளக்கம்.)

அஞ்ஞான நிலையில் மாயை நித்தியமாயிருப்பதாயினும் முத்திநிலையில் பொய்யாய்ப் போகிறபடியால் முத்தியடைய முயலவேண்டியவர்கள் மாயையை அநித்தியமென்றே யுணரவேண்டும்.

" இல்லா மாயை தானிருந்தென் னிறந்தென் னவைபந் தமதாகா
இல்லா மாயை தனைமெய்யா யெண்ணு மதியே பந்தமதாம்
இல்லா மாயை தனைப்பொய்யா யெண்ணு மதியே முத்தியதாம்
இல்லா மாயை யில்லையென்றே யியல்பாய்த் தோன்றுந் தன்னிலையில்"

(ஸ்ரீ குமாரதேவர்-அத்துவித வுண்மை)

எல்லாம் தானாகவேயிருக்கும் பிரம்ம சாக்ஷாத்கார நிலைமை யடைவதே முத்திநிலை. அங்கு இரண்டாவது பொருளேயில்லை.

மேலே கூறியபடி ஜகஜீவபரம் மூன்றும் அநித்தியமென்று வேதாந்தங் கூறுவதும், பதிபசுபாசம் மூன்றும் (ஜகம்=பாசம், ஜீவன்=பசு, பரம்=பதி) நித்தியமென்று சித்தாந்தம் கூறுவதும் ஒவ்வோர் நிலையில் உள்ள உண்மைகளே யாதலாலும், முத்திநிலை யொன்றேயாதலாலும் ஒன்றைத் தவறென்று கருதவொண்ணாது. உண்மை யனுபவம் கண்டவர்க்கு இரண்டும் சமரசமே.

"நினைவது வில்லா நிஜசொரூபத்தை
* * * * *
அதனாலிரண்டு மனாதியதாகும்."
(ஸ்ரீ குமாரதேவர்-சிவசமரசவாத அகவல்).

இன்னும் விரிக்கில் மிகப்பெருகும்.

2. மாயை மலமெய்=மாயையால் உண்டாக்கப்பட்டதும் மலம் பொருந்தியதுமாகிய தேகம்.

(தேகம் நிலையில்லாத பொய். ஆதலின் அதற்கு மெய்யென்று பெயரிடப்பட்டது).

நின் அடியார்தம் விவேகத்தை=ஈசுரபக்தர்களுடைய ஞானத்தை.

வீடு=முத்தி.

"அஞ்ஞானம் அதிகமாய்த் தடித்துள்ளவர்கள் நிலையில்லாத தேகாதி பிரபஞ்சத்தை மெய்யென்றும், அடியார்களுடைய ஞானம், ஆன்மார்த்த சாத்திரங்கள், மோக்ஷவீடு முதலிய உண்மைப் பொருள்களைப் பொய் யென்றும் கருதுவார்கள். ஆதலின் அத்தகையோரிடம் நட்புகொள்ளலாகாது" என்பது கருத்து (ஏனெனில் சத்சங்கம் எப்படி சகல நன்மைகளையு மளிக்குமோ அப்படியே இத்தகைய அஞ்ஞானத் தடிப்பேறிய மூடர்களின் சகவாசம் தீமைகளையே யளிக்குமாதலின்.)

3. அளியுங்கனி=நொந்துபோய் அழுகத்தொடங்கும் பழம்.

அருவினையால் நொந்து அயர்வுறுவேன்=கொடிய வினைகளினால் துன்புற்று வருந்தாநிற்பேன்.
(இத்தகைய நான்)

தெளியும்படிக்கு=(அஞ்ஞானவிருளில் நின்றும் தப்பித்) தெளிவடையும் வண்ணம், (அதாவது அறிவு விளக்கம் பெறும் வண்ணம்).

பரிபாக காலமும் சித்திக்குமோ=(இருவினைகளையும் சமபுத்தியோடு நோக்குவதாகிய) மலபரிபாக காலம் அடியேனுக்கு உண்டாகுமோ.

ஒளியும்=சித்விலாசமும்.

கருணையும்=கிருபையும்.

இன்பமும்=நித்தியானந்தமும்.

ஒருருவாய் வெளிவந்து=(இந்த மூன்றுமே) ஒரு திருமேனியாய்ச் சகளீ கரித்து.

அன்பர்களிக்க நின்றுடும்=பக்தர்கள் ஆனந்திக்குமாறு சிற்சபையில் ஆனந்தத்தாண்டவம் புரியும்.

விழுப்பொருளே=யாவற்றிற்கும் மேலாகிய பரம்பொருளே.

---

# ஆனந்தபோதினி

இரக்தாட்சி௵ மாசிமீ கஉ

## கல்வி.

"கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

இத் திருக்குறளின் கருத்தாவது, ஒருவன் கற்கத் தக்க நூல்களை சந்தேக விபரீத மறக்கற்று, கற்றவாறு அந்த நூல்கள் போதிக்கின்ற சன்மார்க்கத்தில் நின்று ஒழுகவேண்டுமென்பதாம். அவ்விதங் கற்று நல்லறிவு பெற்று, இல்லறத்திலிருக்கும் போது எவரெவரை எப்படி உபசரிக்க வேண்டுமோ அப்படி உபசரித்து, தான தருமங்களைத் தக்கபடி செய்து, தெய்வவழி பாட்டைக் கடைப்பிடித்து இல்லற இன்பத்தைக் குறைவற அநுபவிக்கவேண்டும். துறவு பூண்டபின் தவமேற்கொண்டு நித்திய அநித்தியங்களின் உண்மை யுணர்ந்து, நிராசையைக் கடைப்பிடித்து வாழவேண்டும்.

அறிவை விசாலப்படுத்தி ஒருவனை உயர்ந்த பதவிக்குக் கொண்டுவருவது கல்வியே. எவ்வித ஆபத்தையும் போக்குவதும் அதுவே. குறையாத இன்பத்தை யளிப்பதுவும் அக் கல்வியே. அதனுல் சித்தியாத நன்மை ஒன்றுமேயில்லை. ஆகையாற்றான் பெரியோர் அதனைக் குற்றமறக் கற்கவேண்டுமென்றனர். விலையில்லா மாணிக்கமாதலின் அதன் பெருமையை அளவு படுத்த முடியாது. நாளுக்குநாள் பெருகிக்கொண்டு போகுமே

யொழியத் தாழ்வுபடாது. அதற்கு அழிவென்பதே யில்லை. உலகம் மேம்பாடடைவது கல்வியினாலே தான். எவ்வளவோ சீர்திருத்தங்கள் அப்போதைக்கப்போது நடை பெற்றுவருவது கல்வியின் பயனன்றோ? மக்களுயிர்க்கு உற்றதுணை கல்வியினும் வேறெது?

இத்தன்மையான கல்வியைக் கற்பதில் மூன்று வழிகளுண்டு. ஒன்று பல நூல்களை வாசித்துப் பயில்வது; மற்றொன்று கேள்வி; வேறொன்று காட்சி அதாவது பிறர் நடையைப் பின் பற்றுவது.

பல நூல்களைக் கற்றவன் ஒன்றை எழுதவோ பேசவோ புகும்போது அந்நூல்களை ஆதாரமாக எடுத்துக்காட்டுகிறான்.

கேள்வியுற்றவன் தனது விவகாரங்களுக்கு ஆதாரமாகத் தான் எவரிடம் கேட்டுணர்ந்தானோ அந்த அறிவாளரைச் சுட்டிக் காட்டுகிறான்.

பின்பற்றியவன் தனது செயல்களுக்கு ஆதாரமாகத் தான் எவரைப் பின்பற்றினானோ அவரை வெளிப்படுத்துகிறான்.

இவ்வளவும் நுண்ணறிவுடையவனைப் பொருந்தியவையேயாம். அவனே நீரைப்பிரித்துப் பாலை நுகரும் அன்னப்பறவையை யொத்துக் குற்றத்தை நீக்கிக் குணத்தைக் கொள்ளவும், புல்லுள்ள இடத்தைக்கண்டு அங்குள்ள புல் அவ்வளவையும் வயிறார மேய்ந்து பிறகோரிடத்திருந்து அப்புல்லைச் சிறிது சிறிதாக வாயில் வருவித்தருந்தும் பசுவைப்போன்று விஷயங்களைக் கிரகித்துணரவும் யோக்யதை வாய்ந்தவன்.

மழைநீர்த்துளியை உட்கொண்டு, அதனைக் கெட்டி முத்தாக்கிப் பயன்படக் கொடுக்கும் இப்பியைப்போல் கற்றதைத் திரப்படுத்தித் தனக்கும் பிறர்க்கும் பயனுறச் செய்யும் சக்தி வாய்ந்தவனும் அவனேயல்லவா?

நீர்த்துளியை ஒரு பயனுமின்றித் தன்னிடத்திலேயே தத்தளித்துக் கொண்டிருக்கும்படி யேந்தி நிற்கும் தாமரை யிலையைப் போல் கற்றதைப் பயன்படுத்தா தேந்தியிருக்கும் மந்த அறிஞனையும், நீர்த்துளியை மாயமாக்கும் காய்ந்த இரும்பைப் போல் கற்றதைப் பாழாக்கும் சூன்ய அறிஞனையும் மேற்சொன்ன விஷயம் சாருதல் இன்றாம்.

பிறர் நடையைப் பின்பற்றுபவன் அறிவீனனுயிருந்தால் அவனுக்கு நிதரிசனமாக ஒருகதை வழங்குவதுண்டு. அக் கதையை நாம் பன்முறை கேட்டிருக்கிறோம். இருந்தும், இந்த சந்தர்ப்பத்தில் சொல்லவேண்டிய தவசியமாகின்றது.

புத்திசாலியாகிய ஒருவன் ஒரூரில் தன் குடும்பவிவகாரங் களுக்குத் தலைவனுயிருந்தான். அக்கம் பக்கத்தில் நேரும் சுபா சுபங்களுக்கு அவன் போய் வருவதுண்டு. அவனுக்கு ஒரு இளைய சகோதரனிருந்தான். அவனோ கல்விபயிலாத மூடாத்து மாவாயிருந்தான். ஆனால் அண்டை அயலில் நேரும் சுபாசுபங் களுக்குத் தன் அண்ணன் மாத்திரம் போய்வருவது அவனுக்குப் பிடிக்கவில்லை. இதைப்பற்றி யடிக்கடி அவன் தன் அண்ண னுடன் வாதித்துவந்தான். மூத்தவன் "அப்பா! நீயோ கல்வி யை அலக்ஷியஞ் செய்துவிட்டாய். அதனுல் உனக்கு உலக விவகாரங்கள் ஒன்றுந் தெரியாது. நீ போனுல் எவரெவர்களு டன் எவ்வெவ்விதம் நடந்து கொள்ளவேண்டுமோ அதை நீ அறிந்து நடக்கும் சாமார்த்தியம் உள்ளவனல்ல. நீ நமது வீட்டிலேயே சுகமாயிரு. எல்லா வேலைகளையும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று தடுத்துவருவான்.

இப்படியிருக்க ஒரு நாள் மூத்தவன், தாயாரைப் பறி கொடுத்த ஒருவனைக் காணச் சென்றுன். இளையவனும் அவனைத் தொடர்ந்துபோனுன். மூத்தவன் தான் காணவேண்டியவனைக் கண்டு "ஐயா! உமது தாயார் இறந்ததுபற்றி யான் மிகவும் வருந்துகிறேன். என்ன செய்யலாம். நம்மாலாவது ஒன்று மில்லை. எப்போது பிறந்தோமோ அப்போதே மரணமும் நம் மைக் காத்துக்கொண்டிருக்கிறது. அதுபற்றி நீர் கலங்கவேண் டாம். அந்த அம்மாள் உமக்கு மட்டுமா தாயார். எனக்குந் தாயார்தான். எல்லோருக்குந் தாயார்தான். புண்யவதி. கைதவ றிப்போயிற்று. இனி நடக்கவேண்டிய அலுவல்களைப் பாரும்" என்று தேருதல் சொல்லி விடை பெற்றுக்கொண்டு திரும்பினுன். இதை இளையவன் கவனித்தான். "இப்படி தானே விசாரிப் பது. இது தெரியாதா நமக்கு. வேணுமென்று நமது அண்ணன் நம்மை எங்கும் அனுப்பாமல் எல்லாக் கவுரவத்தையும் அவனே பெற்றுக்கொள்ளுகிறுன். இனி நாம் சும்மா இருக்கலாகாது. அடுத்த முறை ஏதாவது வந்தால் அது நமது பார்வையாயிருக்க வேண்டும்" என்று தீர்மானித்துக் கொண்டான்.

இவன் எண்ணப்படியே சில தினங்களுக்குள் ஒருவனுடைய மனைவி இறந்துபோனாள். அவனைக் காணத் தானே போக வேண்டுமென்று இளையவன் தன் அண்ணனைத் தொந்தரவு செய்தான். என்ன சொல்லியுங் கேட்கவில்லை. "சரி, நீயே போய் வா" என்று உத்தரவு கொடுத்துவிட்டான்.

இளையவன் மிகவும் சந்தோஷங்கொண்டு "இப்போது தான் நமக்கு கவுரவம் பிறக்கும் நாள் ஆரம்பித்தது. இனி சகல விவகாரங்களுக்கும் நாமே போகவேண்டும். இதுவரையில் அண்ணன் அநுபவித்தது போதும்" என்று சிந்தித்துக்கொண்டு மனைவியைப் பறிகொடுத்தவனைப் போய்க் கண்டான். கண்டதும், அவனை நோக்கி "ஐயா! என் சும்மா விம்மி விம்மி அழுகிறீர். தவறிப்போன விஷயத்துக்கு நாமென்னசெய்யலாம். ஆயினும் உமது மனைவி என்னவோ உத்தமி. அவள் உமக்குமட்டுமா மனைவி. எனக்கும் மனைவிதான். எல்லோருக்கும் மனைவிதான்" என்றான்.

அழுதுகொண்டிருந்த புருஷன் இவ்வார்த்தைகளைக் கேட்டதும் அடங்காக் கோபங்கொண்டு அவனை நையப்புடைத் தனுப்பினான். அடிபட்ட இளையவன் "சீ! சீ! இனி நாம் எங்கும் போகக் கூடாது. நமக்கு கல்வி வாசனை கிடையாது. நம்மை ஒருவரும் கவுரவப்படுத்த மாட்டார்கள்" என்று தீர்மானித்துக்கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தான்.

இதனால் எத்தகைய விஷயங்களுக்கும் கல்வியறிவு இருந்து தீரவேண்டிய தென்பது விசிதமாகின்றது—நிற்க,

தகாத நூல்களைக் கற்கக்கூடாது. அவற்றால் நமக்கு ஆத்மார்த்தமாக சித்திப்பவை ஒன்றுமில்லை. அறிவு நூலைப்போல் உலக நூல் நமக்கு சாசுவதமான புகழை யளிக்காது.

"அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகநூல் ஓதுவ தெல்லாம்-கலகல
கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்"

என்று நாலடி போதிப்பதைக் கவனிக்கவும். விரிக்கிற் பெருகும்.

ஓம்தத்ஸத்.

---

# பத்திரிகையும் வியாசமெழுதுவோரும்.

நம் தமிழ் மக்களின் கல்வி, அறிவு, ஒற்றுமை, நாகரீகம், பக்தி, முன்னேற்றம் முதலிய பல மேலான விஷயங்களைக்கருதியே உலவிவரும் ஏனைய பத்திரிகைகளுள் நமது ஆனந்தனே முதன்மை பெற்றவனென்பதை அவனோடு பழகிவரும் நேயர்கள் நன்கறிவார்கள். எனினும் நமது சந்தா நேயர்களிற் சிலர் தாம் அதிக பிரயாசத்தோடு எழுதியனுப்பும் வியாசங்கள் ஆனந்தனில் பிரசுரிக்கப்படுவதில்லை யென்றும், இன்னும் சில சில்லறைப்புகார்களும் சொல்லுவதை நமது ஆனந்தன் மூலமாயறிந்து எனக்குத் தெரிந்தவரையில் சில சமாதானங்களை இதன்கீழ் வரையலானேன். முக்கியமாய் வியாசம் எப்படிப்பட்டதா யிருக்கவேண்டுமென்பதைக் குறிப்பிடுகிறேன்.

1. ஒருவர் தாம் எழுதும் வியாசம் தம் பெயரோடு பத்திரிகையில் வெளிவரவேண்டுமென்ற கவுரவத்தை மட்டும் கருதாது பத்திரிகையின் நோக்கம் கொள்கை முதலியவற்றை அனுசரித்ததாயிருக்கிறதா வென்பதைக் கவனிக்கவேண்டும்.

2. கீழ்க்குறித்தவைகள் விருத்தியாகும் வண்ணம் அவைகளிலேதேனும் ஒன்றைப்பற்றிய வியாசமாயிருக்கவேண்டும்.

1. தேசாபிமானம். 2. பாஷாபிமானம். 3. ஆசாரம். 4. ஒழுக்கம். 5. கல்வி. 6. சாஸ்திரப்பயிற்சி. 7. வியாபாரம். 8. சகோதர உணர்ச்சி. 9. ஒற்றுமை. 10. நன்னடத்தை. 11. தொழில். 12. அறிவு. 13. செல்வம். 14. முன்னேற்றம். 15. மாதா, பிதா, குருபக்தி. 16. தெய்வபக்தி. 17. தர்மம். 18. நீதிமொழிகள். 19. சன்மார்க்கத்தை யொட்டி எழுதப்படும் நாவல்கள். 20. இயற்கை நூதனங்கள் புதுமைகள் முதலியனவாகும்.

3. கீழ்க்கண்டவைகளுக்குக் கிஞ்சித்தும் இடம் கொடுக்கக்கூடாது.

1. மததூஷணை. 2. ஜாதித்துவேஷம். 3. பிரதேச இகழ்வு. 4. குறிப்பிட்ட ஒருவருடைய கெட்டநடத்தை. 5. தற்புகழ்ச்சி. 6. வீண் தர்க்கத்துக் கிடங்கொடுத்தல். 7. விளம்பரம்.

4. அடியிற் கண்டவைகளைத் தகுந்த முகாந்தரத்துடன் பொதுவாகக் கண்டித்து விலக்க முயலவேண்டும்.

1. அநாகரீகம். 2. டாம்பீகம். 3. வீண் செலவு. 4. துர்ப்பழக்கம். 5. மதுவுண்ணல் போன்ற பஞ்சமா பாதகங்கள்.

5. ஒவ்வொருவரும் தம் தம் மதத்திலுள்ள சத்விஷயங்களை வெளியிடுவதில் பிறமதங்களில் அதற்கொவ்விய விஷயங்களை மேற்கோளாகவும், உதவியாகவும் எடுத்துக் கூறலாமேயன்றித் தாழ்வாகக் கூறாமலிருப்பது முக்கியம்.

6. எழுதும் வியாசம் பெரும்பான்மையோருக்கு அனுகூலமுடையதாக இருக்கவேண்டும்.

7. ஒருதடவை ஒருவரால் கூறப்பட்டதல்லாததா யிருக்கவேண்டும்.

8. வழவழ குழகுழ என்று ஏட்டை நிரப்பாமல் எடுத்துக்கொண்ட விஷயத்தை யளந்து எழுதும் ஒவ்வொரு வார்த்தையும் வாக்கியமும் அர்த்த புஷ்டியுடையதாயும், அவசியமானதாயு மிருக்கவேண்டும்.

9. அச்சுக்கோப்பவருக்குக் கஷ்டமன்னியில் தெளிவாகவும், சுத்தமாகவும் எழுதவேண்டும்.

10. எத்தனையோ காரணங்களில் ஒன்றைக்கருதி ஒரு வியாசம் பிரசுரிக்காது விடப்படலாகும் அதற்காக ஆயாசமடைவதும், பத்திரிகாசிரியரை யதற்காகக் காரணங்கேட்டு அவருக்கு வீண் சிரமம் கொடுப்பதும் கற்றறிந்தோர்க்குத் தகுதியாகாது.

மேற்கூறிய விஷயங்களைக் கவனித்து எழுதப்படும் வியாசங்களைப் பிரசுரிக்க எவரும் மறுக்கமாட்டார்களென்பது என் துணிபாதலால் மற்றும் நேயர்கள் அவ்வாறே செய்யும்படி பிரார்த்திக்கிறேன்.

**A. மெத்துசலா உபாத்தியாயர்.**
போர்டு பெண்பாடசாலை, ஜெயங்கொண்ட சோழபுரம்.

---

## கற்புள்ள ஸ்திரீகளுக்குத் தகாத சில நடக்கைகள்.

1. "வீட்டைவிட்டு அடிக்கடி தெருவாசற்படியண்டை வந்து பார்த்துக்கொண்டிருத்தல்.

2. வெளியே தனியாய்ப் போய்க் கிரமத்திற்கு மேல் அதிக நேரந் தங்கி வீண் வம்பு பேசுதல்.

3. நல்லவர் பொல்லாதவர் எல்லோர் பேரிலும் விபசார தோஷம் கற்பித்துக் கொண்டிருத்தல்.

4. புகுந்த வீட்டைத் தூஷித்துப் பிறந்த வீட்டை மேன்மைப் படுத்திப் பேசுதல்.

5. கணவனோடு எதிர்பேசி அவனைப்பற்றி மற்றவரோடு ஏதாவது தோஷம் பேசுதல்.

6. அன்னியரோடு இவன் அவளை அவன் இவளை வைத்துக்கொண்டிருக்கிறான் என்று பேசுதல்.

7. அன்னிய புருஷரிடத்திற் பேசக்கூடாத விஷயங்களைப் பேசுதல்.

8. எப்பொழுதுங் கண்ணாடியிற்றங்கள் அழகைப்பார்த்துக் கொண்டிருத்தல்.

9. தங்கள் ஆபரண முதலியவைகளை வாங்கின கிரயம் வாங்கின இடம் இவைகளைத் தாமாகவே சொல்லுதல்.

கவனிக்கவேண்டியவை.

10. போகத்தகாத கூத்துகள், நாடகங்கள், பயாஸ்கோப் முதலியவற்றிற்குப் போக ஆசைப்படுதல்.

11. புருஷன் அநுமதியின்றி அவன் மனதிற்கு விரோதமான ஆட்களுடன் பேசுதல், அவர்கள் இடங்களுக்குப் போகுதல்.

12. புருஷன் கோபித்தால் அவனுக்கு மேற் பதின்மடங்கு பேசி ஊர் சிரிக்கச் செய்தல்.

13. பர ஸ்திரீகளை வைத்திருக்கும் அன்னியரைக் கண்டால் அவர்கள் வைப்பாட்டிகளின் யோக க்ஷேமங்களை அதிக ஆவலோடு விசாரித்தல்.

14. புருஷன் மனஸ்தாபமாயிருக்குங் காலத்திலும் அவன் நோயாயிருக்குங் காலத்திலும் ஊரில் இல்லாதகாலத்திலும் மையிட்டுப் பொட்டிட்டு ஆபரணங்கள் பூண்டு ஊர்சுற்றப் புறப்படுதல்.

15. புருஷனுடைய உத்தரவின்றி வீட்டிலுள்ள சாமான்களை விற்றுச் சிறுவாடு சேர்த்தல்.

16. அன்னிய புருஷனுக்கும் ஸ்திரீக்கும் நட்புண்டாகும் விஷயத்தில் மிகுந்த சிரத்தை எடுத்துத் தரகுபேசுதல்.

ஓர். உலகமானி. (லங்காவிகடன்)

---

## ஹிந்துக்கள் (மிக முக்கியமாய் சைவசமயிகள்) கவனிக்கவேண்டியவை.

1. உலகத்திலே பற்பல சமயங்களுண்டு. அவ்வெல்லா மதங்களிலும், ஒரேகடவுள் நானாவிதமான ரூபங்களோடும் பெயரோடும் அழைக்கப்பட்டு வணங்கப்படுகிறாரென்பது அறிஞர்களெல்லாரும் ஒத்துக்கொண்ட விஷயம். இவ்வாறிருக்கையில், "உன் சமயத்திலே, கூறப்பட்ட கடவுள் பொய். எங்கள் மதத்தில்தான் மெய்யான கடவுளிருக்கிறார். அவரால் தான் மோட்சமடைய ஏலும்" என்று கூறுபவர் எவ்வளவு பெரிய தவறுடையவராயிருக்கவேணும். ஒரு சமயத்தவர், மறு சமயத்திலிருக்கும் பேதையரை யேமாற்றி அச்சமயத்திலு முண்மை யிருக்கிறதென்பதை யறிந்தும், வீண் பொய்க்கூற்றுக்களைக்கூறி, ஏய்த்துத் தம் மதத்திற்குத் திருப்புவது, எவ்வளவு அசூசியான செயலாயும் முழுமுதற் கடவுளுக்கே யொப்பாததாகவுமிருக்கும். பிறமதத்தவர்கள் எளிதில் தங்கள் வலைக்குள் அகப்படக்கூடிய இரை எவ்விடத்திற் கிடைக்குமென்று தேடுகின்றார்களென்றாலோ, தங்கள் சமயத்தின், உண்மையறியாத பாமர இந்துக்கள் மீதே, இவர்கள் தங்கள் மாய வலையை வீசி யவர்களை மயக்கிவிடுகின்றார்கள். இதற்குக் காரணம் யாது? என்று விசாரிக்கப்புகில், நம் நாட்டிலிருக்கும் படிப்பு வாசனைக்குறைவும், தாய்ப்பாஷைத் தேர்ச்சிக்குறைவும், சொந்தசமயத்தின் ஆராய்ச்சியின்மையும், அதனறியாமையும், ஏழ்மைத் தனமும், இன்னோரன்ன பல காரணங்களே யாகும்.

2. இவ்வித கேவலமான செயல்கள், இந்தியா இலங்கைப் பகுதிகளில், ஏராளமாய் நடைபெறுகின்றன. பெரும்பாலான சனங்கள், தக்க கல்வி கற்கக்கூடிய நிலைமையிலில்லை. அன்னோர் பெரும் வறுமையினால் வருந்துகின்றனர். அவர்களுக்குச் சீவனத்திற்கு வழிகாட்டுவதாகச் சொல்லி, தங்கள் மதத்திற்கு அழைக்க, பிறமதத்தவர்கள் கூச்சப்படுகிறார்களில்லை. இவ்விடங்களிலிருக்கும் வித்வான்களான சைவசமயிகள் தங்களுக்குக் கடவுளாற் கொடுக்கப்பட்ட கல்வித்திறமையை, அவர் ஊழியத்திற்காகப் பிரயோசனப்படும்படி செய்யக்கருதுவதில்லை. இவர்களிடம் சமயாபிமான மில்லாமையின் பொருட்டு, எவ்வளவு துக்கப்படவேண்டியிருக்கின்றது. மற்ற மதங்களில் தமது மதத்தின் மகிமையையும், சாரத்தையும் விளங்கப்பண்ணிப் பிரசாரம் செய்யச் சம்பளம் பெறும் போதகர்களுளர். அவர்கள் கடவுள் ஊழியத்திற்காகத் தங்கள் சீவனத்தை யர்ப்பணஞ் செய்கின்றார்கள் இவர்களின் தொழில்கள் முற்றாக இவ் விஷயங்களிலே செல்கின்றன.

3. சைவசமயிகளிலும் மதாபிமானத்தால் ஏவப்பட்டு, அதன் முன்னேற்றத்திற்காக உழைப்போரில்லையென்று சொல்ல ஏலாது. ஆனால் அவ்வகையானோரை மற்ற மதத்தவர்களோடு ஒப்பிட்டுப்பார்க்கும் பொழுது, மிகக்கொஞ்சம் பேரேயுள்ரென அறியலாம். சைவசமயிகளில், இப்போதிருப்பதிலும் பார்க்க இன்னும் அனேகம்பேர், தங்கள் செல்வத்தையும், தங்கள் வாழ்க்கையையும், தங்கள் கல்வியையும், நமது மதத்தின் மேம்பாட்டிற்காகவும், அதைப் பழைய உன்னத நிலைக்குக்கொண்டுவருவதற்காகவும், அர்ப்பணஞ்செய்து, தங்கள் வாழ்நாளை யதற்கே செலவழிப்பார்களானால், நமது சமயம், மேன்மேலும் பெருகித் தழைத்தோங்கும் என்பதில் ஐயமின்றாம்.

4. இவ்வாழ்க்கையி லிருப்போனுக்கு சமயத்தொண்டு புரிய விருப்பமிருந்தாலும் அவகாச மதிகமேற்படாது. அவனுடைய மனமானது பெண்டு, பிள்ளைகளுக்காக வேண்டிய பொருள் தேடுதலில் அதிகமாக ஏவப்பட்டு ஈசனுடைய காரியங்களின் தொழிலில் மிக்க குறைவுபெறும். ஆயினும் அவனும் தன் வாழ்நாளின் ஓர் பாகத்தை இத்தகைய ஈசுவரத் தொண்டில் செலவிடவேண்டியது அவன் கடமையேயாகும். அதோடு வேறு வழிகளிலும் இதற்கு உதவிபுரிய வேண்டும்.

5. "கற்றதனாலாய பயனென்கொல், வாலறிவனற்றாள் தொழாஅரெனின்" என்பதற்கிணங்க, தன் சொந்தமதத்தைப்பற்றி நன்றாக வாசித்து, ஆராய்ச்சிசெய்து, அதனுண்மையைத் தெரிந்து, அதனாலடையும் பெரும் பேற்றைப்பெற்று மகிழ்வதல்லவோ, இம்மானிடச் சென்ம மெடுத்ததின் பயன்! இஃதல்லாமல், கற்கத் தகுதியற்றவர்களாயும், பாமரர்களாயுமிருக்கும், சகோதர சகோதரிகளுக்குத் தானுணர்ந்த உண்மையை, விளக்கிக்காட்டி, அறிவூட்டி, அவர்களையும் மேம்பாடான பதவிக்குக்கொண்டு வருவதல்லவோ, ஒரு சீவ னின்னொரு சீவனுக்குச் செய்ய

வேண்டிய பெரும் உதவி! இப்பேர்ப்பட்டவர்கள், இதர சமயங்களை ஆராய்ச்சிசெய்து, அம்மதங்களிலிருப்போர் பாமர சனங்களுக்குப் போதிக்கும் பொய்க் கூற்றுகளின் அர்த்தத்தை யறியப்பண்ணி, நமது சமயத்தின் உண்மையைப் பிரசுரிக்கப் பண்ணுவார்களானால், மறு மதத்தவர்கள், தாங்களாகவே யடங்கி, தங்கள் ஏமாற்றுதல் பலிக்காதென்றறிந்து, இவ் விழிவான செயலிலிருந்தும் நழுவுவார்கள்.

6. மேலே யெடுத்துக்காட்டிய விதமாய் நம் தமிழ்மக்கள், எம்பெருமானின் தொண்டு செய்தலையே பெரிதாகக்கருதி, பாமர சனங்களுக்கு மதபோதனை செய்து அனாதியாகிய நமது சமயம் தழைத்தோங்க, இறைவன் திருவருள் புரிவாராக.

வ. முத்துச்சாமி.

**குறிப்பு:**—ஜீவகாருண்யம், ஈசுரபக்தி, தருமம், ஞானம் இவற்றால் பிரசித்திபெற்றது நமது புண்ணிய பூமியாகிய பாரதநாடு ஒன்றே. முற்காலத்திலிருந்ததைவிட அவை யிப்போது குறைந்திருந்தாலும் இன்னும் இருந்துகொண்டுதா னிருக்கின்றன. என்றும் இருந்துகொண்டுதா னிருக்கும்.

ஆனால் இக்காலத்தில் தருமத்தைச் செய்பவர்கள் பாத்திரமறிந்து செய்ய வேண்டுமென்பதையும், காலத்திற்கு அவசியமான வழியில் செய்ய வேண்டுமென்பதையும் சற்றும் கவனிக்கிறார்களில்லை. ஈசுவரனுக்கு வேண்டியது ஒன்றுமேயில்லை. மற்றபடி அவரை யொரு சொரூபமாகப் பாவித்து நாம் அவருக்குச் செய்யும் சோடசோபசாரப் பூசையும், உத்ஸவாதிகளும், அவரிடம் பூரண அன்பாகிய அநந்நியபக்தி வைக்கமுடியாததால், ஒருவிதமாய் நமது பக்தியை வெளியிடும் செய்கைகளே யன்றி வேறில்லை. நம் முன்னோர்களாகிய சமயாசாரிகள்,

"ஞால நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே"

என்ற நோக்கங்கொண்டே நாடெங்கும் சென்று நமது வேதாகமங்களைப் போதித்து நித்தியத்வமுடைய நமது அனாதிமதத்தைப் பரவச்செய்தார்கள்.

புறச்சமயத்தவர்கள் பலவித வஞ்சத் தந்திரங்களால் நம்மவர்களைத் தங்கள் மதத்திற்கு இழுத்துக்கொண்டிருக்கும் இச்சமயத்தில் நம்மவர்க்கு நமது மதத்தின் பூரணத்தன்மையையும் அழியா உண்மையையும் எடுத்துக்காட்டி, அவர்கள் புறச்சமயத்தவருடைய மாயத்தில் சிக்காதபடி காப்பாற்றவேண்டியது நமது மதம் குன்றாதிருக்கக் கருதுவோர் செய்யவேண்டிய அவசியமான வேலை. அதைக் கவனிப்போர் ஒருவருமில்லை. இக்காலத்திற்கு அதுவே சிறந்த ஈசுவர கைங்கரியம் என்பது கவனிக்கப்படவில்லை.

இக்காரியத்தைச் செய்யவேண்டியவர்கள் முதலாவதாக, மடாதிபதிகள், மதத்தலைவர்கள், சந்நியாசிகள் இவர்களே. இவர்களோ இதைப் பற்றி கனவிலும் நினைப்பதில்லை. இவர்கள் இலௌகிக காரியங்களிலேயே தங்கள் கவனம் முழுமையும் பெரும்பாலும் செலுத்துகிறார்கள். கவர்னர் முதலிய பெரிய அதிகாரிகளுக்கு விருந்து முதலிய உபசாரங்களைச்செய்வதில் பணத்தைத் தாராளமாகச் செலவு செய்கிறார்கள்: "நாம் இப்படிச் செய்வதால் தான் தருமஸ்தாபன மசோதா முளைத்து நம் மதத்தை விழுங்கப்பார்க்கிறது" என்ற பயங்கரமான உண்மையைக் கூட இவர்கள் கருதாதிருப்பது மிக்க விசனிக்கத்தக்கதே.

சந்நியாசிகளில் கல்வியறிவுடையோரும் கூட இதைக்கவனிப்பதில்லை. அவர்கள் புதிதாய் மடங்கள் தாபிக்கவும், பல விடங்களுக்குச் சென்று மடத்திற்குப் பொருள் சேகரிக்கவும், புகழ்பெறவும் ஆவலுள்ளவர்களாக விருக்கிறார்கள்.

இல்லற வாசிகளாயுள்ளவர்களில் கல்வி கற்றோரோ—அவர்களில் பெரும்பாலோர் மதசம்பந்தமான விஷயங்களை நினைப்பதேயில்லை. ஏனெனில் அவர்கள் இலக்கண இலக்கியத்தாலாய பாஷைக்கல்வியில் பிரசித்தி பெறுவதையும், அதனால் பொருள் சம்பாதிப்பதையுமே நோக்கமாகக் கொண்டிருப்பதால் மறுமைப்பயனை யடையும் முயற்சி எடுத்துக்கொள்வதேயில்லை. ஆன்மார்த்தக் கல்வியேனும் ஈசுரபக்தியேனும் அவர்களிடம் காண்பதரிதே யெனலாம்.

நமது மதத்தைவிட்டு அன்னியமதம் புகுந்தோர், புகுவோர் இவர்களில் மிகப் பெரும்பாலர் கீழ்ச்சாதியென்றும் தீண்டப்படாதவர்களென்றும் நாம் ஒதுக்கிவைத்திருக்கும் தாழ்ந்த வகுப்பினரே. நாம் அவர்களை யவ்வாறு நடத்துவதே அன்னியமதத்தினர் அவர்களை இழுத்துக்கொள்வதற்குப் பெரிய உதவியாயிருக்கிறது. அன்னியமதப் பிரசாரகர் நம்மவர்களாகிய கறுப்பு மனிதரை உள்ளத்தில் மிக்க தாழ்ந்தவர்களாகவும், அநாகரீகர்களாகவும், ஒருபோதும் சமமாய் நடத்தற்குரியவர்களல்லவென்றுமே கருதுகிறார்கள். ஆனால் தந்திரமாய் வெளிக்குச் சமமாய் நடத்துவதாகக்கூறி அபிநயிக்கிறார்கள். நாம் நம்மவர்களுக்குக் கல்வியும் மதபோதனையுமளித்து, சுத்தமாயிருக்கக் கற்பித்து அவர்களைச் சகோதர பாவமாய் நடத்தினால் பிறகு ஒருவர்கூட அன்னியமதம் புகார்களென்பது திண்ணம்.

மடாதிபதிகள் மடங்களில் சந்நியாசிகளைப் பயிற்சிசெய்து அவர்களைக் கொண்டு நம் தேசக்ஷேமத்திற்கும், மதத்தின் க்ஷேமத்திற்கும் அவசியமான இப்பெரும் புண்ணியச்செயலைச் செய்விக்கலாகாதா! சம்பளம் கொடுத்தால் இல்லறவாசிகளும் இத்தொழிலுக்கு வருவார்கள். மடாதிபதிகள் கொஞ்சம் சிரத்தை யெடுத்துக்கொண்டால், சிவதருமத்திற்கென்று வைக்கப்பட்டிருக்கும் பொருள்களின் வருமானத்தை யதிகமாய் இதற்குச்

செலவுசெய்ய விரும்பாவிடினும், சுலபமாகவே ஒரு புதுநிதியே சேகரிக்கக் கூடுமென்றே. அவர்கள் அத்தகைய வேலையைச் செய்விக்கத்தொடங்குகிறார்களென்று தெரிந்தால் தரும சிந்தனை நிறைந்த நாட்டுக்கோட்டை செட்டிமார்களும், தென்னுட்டிலுள்ள பக்திமான்களான ஜமீன்தார்களும், மற்ற விடங்களிலுள்ள செல்வவந்தர்களும் பொருள் உதவி செய்வார்களென்பதில் சற்றும் ஐயமின்றும்.

எல்லாம் வல்லகருணை நிதியாகிய பொன்னம்பலக் கூத்தனே அவர்கள் மனம் இவ்வழியில் திரும்பச்செய்து அருள்புரியவேண்டுமாய் அனைவரும் பிரார்த்திப்போமாக.

——— பத்திரிகாசிரியர்.

## தேகப்பயிற்சி.

அனேக நூற்றுண்டுகளுக்கு முன் நம் நாட்டில் மிகவும் முக்கியமாகவும், மேன்மையாகவும் கருதப்பட்ட இத்தேகப்பயிற்சி, தற்கால நாகரீக முதிர்ச்சியால், நாளுக்கு நாள் குறைந்து, தற்சமயம், தேகப்பயிற்சி என்றால் அர்த்தம் என்னவெனக் கேட்கும் வாலிபர்களும், மனிதர்களும் அனேகர் உளர். என்ற நிலைமைக்கு வந்துவிட்டது. வேறு சிலர், தேகாப்பியாசம் செய்வது, ‘பயில்வான்’ எனப் பெயர்பெற்று, மல்யுத்தம், முஷ்டியுத்தம் முதலியவைகளைப் பயின்று சண்டைக்குப் போவதற்காகவே என்றும், தாம் அத்தகைய காரியங்களில் பிரவேசிக்க வேண்டியதில்லை என்றும் எண்ணித் தள்ளிவிடுகின்றார்கள்.

தேகப்பயிற்சியினுல் ஒருவன், சுறுசுறுப்பு, பரோபகார சிந்தை, வைராக்கியம் முதலியவைகளை அடைவது மன்றி, நம் சரீரத்துள்ளிருக்கும் இருதயம், நுரையீரல், சுவாசப்பை, ஜீரணக் கருவிகள் முதலிய நுண்ணிய கருவிகளைப் பலப்படுத்தி, இரத்த ஓட்டத்தை அதிகப்படுத்துவதால், இக்கருவிகளெல்லாம் தத்தம் வேலைகளைக் கிரமப்படி செய்து, சாதாரணமாக, மனிதர்கட்குண்டாகும் தலைநோய், வயிற்றுநோய், அஜீரணம், மலச்சிக்கல், கொஞ்சவேலை செய்தாலும், நடந்தாலும் இளைப்படைதல் முதலிய வியாதிகளினின்றும் நீங்கிச் சுகத்தோடு வாழ்வான்.

இச்சரீரத்திற்கு தினசரி வேண்டியவற்றைக் கொடுத்து, ஒவ்வொரு அவயவங்களையும் பலப்படுத்தவேண்டியது நம் கடமையாகும். அப்படிக்கின்றி, அதற்குத் தேவையானவைகள் ஒன்றும் கொடுக்காமலும் வேலையிடாமலும் வைத்திருந்தால், ஓடிக்கொண்டிருக்கையிலேயே திடீரென நின்றுவிடும் மோட்டார்வண்டியின் கதியே நமக்கும் சம்பவிக்கும் என்பது திண்ணம். அதாவது, இன்னும் பல வருடங்கள் சுகமாக ஜீவிக்கக்கூடிய நாம், அகால மரணத்திற்காளாவது நிச்சயம்.

தேகப்பயிற்சி, வாலிபர்கள் மாத்திரம்தான் செய்யலாமென்றும், 25 வயதிற்கு மேற்சென்ற, அல்லது கல்யாணமானவர்கள் செய்வதில் பிரயோசனமில்லை என்றும், நம் நாட்டார்களில் அனேகர் நம்புகிறார்கள்.

ஆனல் இத்தகைய நம்பிக்கை மிக்க தவறானதேயாகும். ஏனெனில், மேல் நாட்டார்களில் பெரும்பாலர் 50 முதல் 65 வயதுக்கு மேற்பட்ட பின்பும், தேகப்பயிற்சியை முறைப்படி செய்து வருவதினல் பார்ப்பதற்கு 35, 40, 45-வயதுள்ளவர்களென்று மதிக்கத்தக்கவர்களாய் விளங்குகின்றார்களாம். இதனல், சரீரத்திற்கு இன்றியமையாத இத்தேகப்பயிற்சியை, சிறு பிள்ளைகள் முதல் கிழவர்கள்வரை செய்தப்பியசிக்கலாமென வேற்படுகிறது.

சாதாரணமாக, தேகாப்பியாசம் செய்துவரும் ஓர் மனிதனையும், தேகாப்பியாசம் செய்யாத ஓர் மனிதனையும் ஒப்பிட்டுப்பார்த்தால், தேகப் பயிற்சி செய்பவனின் தேக அமைப்பையும், தேஜஸ்பொருந்திய அவன் முகத்தையும், காம்பீரமான பார்வையையும், வைராக்கியமுள்ள சிந்தையையும், விரிந்த மார்பையும், திரண்டுருண்ட புஜங்களையும், ஆஜானுபாகுவாய் நிமிர்ந்து நிற்கும் ஒயிலையும் பார்ப்பதற்கு பரமானந்தமாக விருக்கும். ஆனல் தேகாப்பியாசம் செய்யாத ஓர் மனிதனிடம் மேற்கூறியவைகள் இருப்பது அரிது.

தினசரி கஷ்டப்பட்டு வேலைசெய்யும் கூலியாட்கள், தச்சர்கள், கொல்லர்கள் எல்லாம் வைத்தியரிடம் போவது கடினம். ஏனெனில், அவர்கள் தங்கள் தங்கள் தேகத்திற்கு சரியான வேலைகளைக் கொடுப்பதால், சுகதேகியாக விருக்கின்றார்கள். ஆனல் தனவந்தர்களோ வெனில், "உண்டுண்டுறங்குவதைக் கண்டதேயல்லாது ஒரு பயனடைந்திலேனே" என நடராசப்பதிகத்தில் பாடியிருப்பதைப் போல், சாப்பிடுவதும், வேலையாட்களை அதிகாரம் செய்வதும், ஓய்வு நேரங்களில் சீட்டுக் கச்சேரியில் உட்கார்வதும், உறங்குவதுமாக விருத்தலால், அடிக்கடி வைத்தியரின் தரிசனம் கிடைக்காவிடில் மிகவும் வருந்துவார்கள். இவர்கள் மோட்டார் வண்டி அல்லது ஜட்காவண்டியின் உதவியின்றிக் கால்நடையாக வெளியில் போவது கடினம். இவ்வாறு அனேகமணி நேரங்களோ, அல்லது நாட்களோ, சுத்தமான ஆகாயம் உலாவாத அறையில் அடைபட்டிருந்து, ஒரு நாளைக்குத் திடீரென வெளியில் போனல், தலைவலி, குளிர், காய்ச்சல் முதலியவைகளால் துன்பப்படுவார்கள். ஏழைகளுக்கு ஓர்காசும் ஈயாத இவர்கள் வைத்தியரிடம் நூறுநூறாகக் கொடுக்கச்சலியார்கள். ஆனல் பணச்செலவின்றி, தேகத்தை நல்ல நிலைமையில் வைத்துக்கொள்ளக் கூடியவழி தெரிந்திருந்தும், அதைச் செய்வதென்றால் நடுங்குகிறார்கள்.

மேல்நாட்டுப் பத்திரிகையொன்றில் ஒரு டாக்டர், "ஒரு ஊரிலுள்ள ஜனங்களெல்லாம், தேகாப்பியாசம் செய்து, சுத்தமாக விருப்பார்களாகில், என்னைப்போன்ற டாக்டர்கள், அவ்வூரைவிட்டு, சொல்லாமல் ஓடவேண்டியதே" என எழுதுகின்றார். அவர் எழுதியதில் எள்ளளவேனும் பொய்யில்லை. நம் நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் தேகாப்பியாசம் செய்துகொண்டும், தங்கள் தங்கள் வீடுகள், உடைகள், போஜனம் முதலியவற்றை இயன்றவரை சுத்தமாக வைத்துக்கொண்டும் வருவாராகில், நம்

நாட்டில் அடைக்கலமெனக் குடியிருக்கும் வைசூரி, பேதி, பிளேக் முதலிய தொத்து வியாதிகளொன்றும் அணுகாது. சுகஜீவிகளாக வாழ்வதுமன்றி, நம் நாட்டார் முன்னேற்றமடைவதற்கும் ஏது வுண்டாகுமென்பது நிச்சயம். நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வமென்பதை மறந்து விடாதீர்கள்.

து. குமாரசாமி. மைடான், டில்லி.

குறிப்பு:—நேயர்களே! முற்காலத்தில் (என் சுமார் 40, 45 வருடங்களுக்கு முன் வரையில் கூட, கிராமாந்தரங்களில் 30-32 வருடங்களுக்கு முன் வரையில் கூட) ஆங்காங்கு தேகப்பயிற்சி செய்யும் "சிலம்பக்கழகங்கள்" (கஸரத்து செய்யுமிடங்கள்) இருந்துவந்தன. அங்கு அப்பியசிக்கப் பட்ட தேகப்பயிற்சியே தேகத்திலுள்ள எல்லா உறுப்புகளுக்கும் பலத்தை யுண்டாக்கி, நரம்புகளுக்கு வலுவைத்தந்து இரத்தசுத்தியையும் இரத்த வோட்டத்தையுமளித்து, மனதிற்கு உற்சாகம், தைரியம், சக்தி இவற்றைக் கொடுத்து தேகாரோக்கியத்தை நிலைத்திருக்கச் செய்வது. நாம் அத்தகைய தேகபல மனோபலன்களை யடையலாகாதென்று அந்தரங்க எண்ணமுடையோரால் நாளடைவில் அத்தகைய சிலம்பக் கூடங்களெல்லாம் தந்திரமாய் அடக்கிவிடப்பட்டன. நம் நாட்டார்க்கோ தம் தம் தேகத்திற்கு பலத்தையும் சுகத்தையும் உண்டாக்கிக்கொள்ள வேண்டுமென்கிற உணர்ச்சியே கிடையாது. அது இருந்தால் அவரவர்கள் தனித்தனியாகவோ, இருவர் மூவர் சேர்ந்தோ வீட்டிலேயே பயிற்சிசெய்து கொள்ளலாகும். தேக பலமும் தைரியமுமில்லாத மனிதர் ஒருவராலும் மதிக்கப்படமாட்டார்கள். யாவராலும் அலட்சியமாகவே நடத்தப்படுவார்கள் என்பது அனுபவமாய்க் காணக்கூடிய விஷயமே. நாம் இப்போது அந்நிலைமையில்தா னிருக்கிறோம். மனதிற்கும் தேகத்திற்கும் நெருங்கிய சம்பந்தமிருப்பதால் தேகம் பலமானதாய் நல்ல ஆரோக்கிய நிலைமையிலிருந்தால் தான் மனமும் சுறு சுறுப்பாய்த் தைரியமுடையதாய் இருப்பதோடு கூடியவரையில் நம்வழிப் பட்டும் நடக்கும்.

இக்காலத்தில் நமது மாணவர்கள் பழகும் தேகப்பயிற்சி, தேகப் பயிற்சி யென்று கூறப்படுதற்கே உரியதல்ல. ஒழுங்காகவும் நாணயமாக வும் உடையணிந்து பெண்பிள்ளைகள் விளையாட்டிற்குரிய பந்தடிக்கும் விளையாட்டால் என்ன தேகபலன் கிடைக்கும்? அதோடு இந்த விளையாட்டு களால் வீண் செலவோ அதிகம். பிரசித்திபெற்ற இராமமூர்த்தி எத்தகைய தேகப்பயிற்சி செய்து கலியுகபீமன் என்ற பெயர்பெற்றார்? இப்போது நம் மாணவர் செய்யும்பயிற்சி நாகரீக சீர்திருத்தமாகிய ஒரு வேலையாகவே கருதப்படுகிறது. நம் நாட்டிலுள்ள அறிவாளிகள் இத்தகைய விஷயங்களைக் கவனிக்காதிருப்பது மிக விசனிக்கத்தக்க காரியமேயாகும்.

பத்திரிகாசிரியர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (சர்வசத்தி.)

(272-ம் பக்கத் தொடர்ச்சி.)

உலகம் அநாதி நித்தியமாயுள்ளதென்று ஒரு சாரார் கூறுகிறார்கள். அதற்குக் கர்த்தனுமில்லையென்கிறார்கள். ஆதலால் பிரபஞ்சத்தை ஆக்குவதற்கு ஒரு கர்த்தனை விரும்புவது அநாவசியமே யாமென்பர். சகல பிரபஞ்சமும் பஞ்சபூதக்கலப்பே யென்பது நிச்சயம். பஞ்சபூதங்களும் ஒரே தன்மையுடையனவல்ல. ஒன்றுக்கொன்று வேறு தன்மையையுடையன வென்பது பிரத்தியட்சம். ஆகாசபூதம் கண்ணுக்குப் புலப்படாதாயினும் அது தன்னை யொழிந்த நான்கு பூதங்களுக்கும் தன்னிடத்தில் இடம் கொடுத்து அவற்றைப் பரிபாலிக்கின்றது என்பதை யுக்தி யனுபவங்களால் நன்குணரலாம். அது எல்லாப் பூதங்களிலும் கலந்து நின்று எல்லாவற்றையும் பரிபாலிக்கின்றது. ஆகாசம் என்பது வெறும் வெளியேயாம். அதற்கு அதுவே சொரூபமாம். ஆதலாற்றான் அது கட்புலனாற் காணப்படுவதில்லை. அது எல்லாப் பூதங்களுள்ளும் புறம்பும் கலந்து நிற்கும் என்பதைப் பிரத்தியட்சத்தில் காணலாம்.

ஆறேழு இழைகளுள்ள நூலை சிறிது நீரில் போட்டுவைத்தால் அந்த நீர் சிறிதுநேரத்தில் காணாமற்போய் விடுகிறது. அந்த நீர் எங்கே போயிற்று? நூலுக்குள் சுவறி நிற்கின்றது. நூலுக்குள் எப்படிச்சென்றது? அதனுள் நமக்குப் புலப்படாத வண்ணம் ஆகாயபூதம் இவ்வெளியை யுண்டாக்கிக்கொண்டு நிற்கின்றது. அந்த ஆகாயத்தில் நீர் சென்று தங்கிவிட்டது. அந்த நூலை முறுக்கிப்பிழிந்தால் அதனுள்ளிருந்த நீர் சிறிது வெளிப்படும். சிறு பான்மை அதனுள்ளேயே தங்கிவிடும்.

இரண்டு பாரம் பஞ்சைக்குவித்தால் அது ஒரு சிறு குன்றுபோல் உயர்ந்து அகன்று நிற்கக்காணலாம். அதன்மேல் ஏறித்துகைத்தால் அது குறைந்து போனதாகத்தோற்றும். அதை மறுபடியும் ஒரு யந்திரத்தில் வைத்து அழுத்தினால் மிகவும் குறைந்ததாகக் காணப்படும். ஏன் அப்படிக் குறைந்து காணப்படுகின்றது! அதற்குள் ஆகாயம் இடை வெளியை யுண்டாக்கிக் கொண்டிருந்தது. யந்திரத்திலிட்டு அழுத்தின மாத்திரத்தில் அது சுருங்கிற்று. அதனாலே குறைந்ததாகக் காணப்படுகின்றது.

இன்னும் வெண்கலம், வெள்ளி, பொன், தாம்பிரங்களிலும், கல்முதலிய கடின பதார்த்தங்களிலும் ஆகாயங்கலந்து நிற்கின்றது. நன்றாய் நெருப்பில் காய்ச்சி இடை வெளிகாணாமல் அடிக்கப்பட்ட பாத்திரங்களில் நீர் முதலிய திரவபதார்த்தங்களையிட்டுக் காய்ச்சினால் அப்பாத்திரத்துக்குட் சிறிது சிறிதாக உஷ்ணம் ஏறி அந்த நீர் சுட்டுக்கொதிக்கின்றது. அது எப்படிச் சூடுகொண்டது. அதனுள்ளிருக்கும் இடை வெளியாகிய ஆகாயத்திற் சிறிது சிறிதாக உஷ்ணம் பிரவேசித்து அதைக் கொதிக்கச்செய்தது. இப்படியே அவற்றை நீரில் போட்டுவைத்தால் அது குளிர்ச்சியைக் கிரகித்

துக்கொள்கின்றது. இப்படியே நீருக்குள்ளும் மண்ணுக்குள்ளும் மரம் செடி கொடிகளிலும் ஆகாயபூதம் நிறைந்தே நிற்கும். ஆதலால் ஆகாயம் எல்லாவற்றையும் வியாபித்து அவற்றைத் தன்னிடத்தில் நிலைபெறச் செய்தும், அவற்றுக்குள் வியாப்பியமாய் இடைவெளி உண்டாக்கிக்கொண்டும் நிற்கின்றது. அதனாலேதான் காற்றானது எல்லாவற்றுக்குள்ளும் பிரவேசித்து அவற்றை ஜீவிக்கச் செய்கின்றது.

இனி இப்பொருள்களேயன்றிச் சர்வாண்ட சராசரங்களுக்கும் ஆகாயம் இடங்கொடுத்துத் தன்னுள் நிலைபெறச் செய்யுமென்பது நூல்களின் கருத்து. இவ்வாறு சர்வ பதார்த்தங்களையும் வியாபித்து அவற்றுக்குள் வியாப்பியமாயும் நிற்கிற ஆகாயபூதம் பரப்பிரமத்து ஓர் வடிவமாய் நிற்கும். எனவே அந்த ஆகாயபூதத்துக்குள் சர்வசக்தியாய் பரப்பிரமம் அந்தர்யாமியாய் அதைப் பிரேரேபித்துக்கொண்டு நிற்கின்றது. இதனாலே தான் வேதம் " ஆகாச மத்யகதயிதி " என்றும், ஆகாச சொரூபி என்றும் அந்தச் சர்வசக்தியை வியந்து கூறியது. இதனால் சர்வ சக்தியானது ஆகாயபூதத்தினுள்ளும் புறம்பும் நிறைந்தும் நிற்கும். ஆகாயத்தை வியாபித்து நிற்கும் என்றதனால் சர்வ வியாபியாயிருக்கும் என்பது புலப்படும். ஆகாயம் எல்லாவற்றையும் விட அதிக சூட்சுமமானது. அதனிலும் நுட்பமான பதார்த்தம் " பரம் " என்ற சர்வசக்தி. அப்படி அதிக சூட்சுமப் பொருளாயின் பிரமாண்ட முதலிய பெரிய பொருள்களை எப்படி நடத்தும்வல்லமை பெறும் எனின், அதிக சூட்சுமமான பிராணவாயு ஒரு பெரிய சரீரத்தை இயக்குவதுபோல் நடத்தக்கூடும். சிறிய பொருளென்னப்படும் நுட்பமான பொருளும் பெரிய பொருள்களை நடத்துவது பிரத்தியட்சம். நுட்பப்பொருளாகிய நீராவி, மின்சாரம் முதலியன அதிக பெரிதான ஸ்தூல பொருள்களை நடத்துவதை நாம் பிரத்தியட்சத்தில் காண்கிறோம். ஆதலால் அதிக சூட்சுமப் பொருளான சர்வசக்தியும் பிரமாண்டகோடிகளைத் தனது மஹாசக்தியால் தடையின்றி நடத்தும். இந்த ஆகாய பூதத்தில் மண் நீர் அக்கினி வாயுவாகிய பூதங்கள் தங்கியிருக்கின்றன. மஹாசக்தியும் அவ்வாகாய பூதத்தின் உள்ளும் புறம்பும் வியாபித்து எங்கும் வியாபகமாய் நின்று சகல பதார்த்தங்களையும் பரிபாகப்படுத்தி யிரட்சிக்கின்றது.

ஆதலால் இதனை அக்கினி சொரூபி என்று வேதம் கூறும். அதனாலேயே சர்வாண்டங்களையும் தன் சக்தியைவிட்டு நீங்காமல் நிறுத்திக்கொண்டு, அவற்றைத் தனது இயக்கும் சத்தியால் சுழற்றிக்கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு சமையத்தில் ஒவ்வொரு அண்டங்களின் சக்தி குறையும். குறைந்தால் நிலை கொள்ளாமல் அலைந்து தனக்கு மேற்பட்டதாயும் அக்கினி சொரூபமாயுமுள்ள சூரியனை நோக்கி விரைந்து செல்லும். சூரியன் அதைக் கிரகித்துக்கொள்ளும். அங்கே சென்றபின் கட்டுக்குலைந்து அணுரூபமாய் விடும். இதனையே அக்கினிப்பிரளயம் என்று நூல்

கள் கூறும். அவ்வணுக்கள் பரிபாகப்பட்டபின் பரிபாகத்துக்கேற்றபடி வேறு அண்டமாகும். இப்படி மாறி வருதலாலே உலகம் அநாதி நித்திய பிரவாகமென்று வேதங்கள் கூறும். இதனாலே தான் உலகம் அநாதி நித்தியமென்று ஒரு சாரார் கூறுவது.

இவ்வாறு சக்திகுறைந்து மாறும் இயல்புடைய பல அண்டங்களும் சக்திகுறைந்து மாறும் இயல்புடையனவே யாமென்று கொள்க. இதனால் ஒரு காலத்தில் சர்வாண்டங்களும் மாறிமாறி வருதலால் சக்தி குன்றி விடும். சக்தி குன்றிவிடவே அவை தமக்குப்புகலிடமாகிய சர்வ சக்தியை நோக்கிச் செல்லும். அது அவற்றையெல்லாம் கிரகித்துக்கொண்டு தனது அக்கினி சொரூபமாகிய பேராற்றலால் பஸ்மமாகச் செய்துவிடும். அப்போது சூரியன் முதலிய சர்வாண்டங்களும் நீறாய்விடும். இதுவே சர்வ சங்காரகாலமென்று நூல்களால் புகழ்ந்து கூறப்படும் சமையமாம்.

இந்தச் சமையத்தையே "ப்ரத்யக்ஜநஸ்திடதி ஸஞ்சு கோசாந்த காலே, ஏகஏவருத்ரோ நத்விதீயாயஸ்தே, நப்ரம நவிஷ்ணுர் நஸூர் யோநாக்நி சந்த்ரதாரகா:" என்று ஜாபாலசுருதி புகழ்ந்து கூறியது. இந்தக் காலத்தில் பரம்பொருளாகிய சர்வசக்தி ஒன்றே தன் இயற்கையாகிய நிர்விகார சொரூபத்துடன் நிலைபெறும். ஏனைய தோற்றப்பொருள்களெல்லாம் மறைந்துபோகும். சர்வசங்கார காலத்திலே பிரம, விஷ்ணு, ருத்திரன், இந்திரன் முதலிய தேவர்களும், அஷ்டதிக்கு பாலகர்களும், சூரிய சந்திரர்களும், தாரகாகணங்களும் கிடையாவென்று மேற்குறித்த ஜாபாலசுருதி சர்வசங்கார காலத்தை விளக்கிக் கூறிற்று. இதனை சதா ஜனனமரண சம்சார துக்கங்களால் நொந்து வாடியிருக்கும் ஜீவர்களின் களையாற்றுங்காலமென்று வேதாதி நூல்கள் கூறும். தொழில் செய்வதற்குரிய கருவி கரணங்களின்றி யிருத்தலால் செயலொன்றுமின்றி ஆன்மாக்கள் களையாறும். சரீரோற்பத்திக்குக் காரணமாயிருந்த அணுக்களெல்லாம் மறு ஜனனத்துக்காகப் பரிபாகப்படும். சர்வசங்கார காலத்துக்குப் பின் போகுமிடமொன்று மில்லாமையால் அவ்வணுக்கள் என்ன செய்கின்றன? எங்கே போயடைந்தன? என்ற சில கேள்விகளுண்டாவதற்கு ஆதாரமுண்டு. இவ்வணுக் கூட்டங்களின் சக்திகளெல்லாம் மஹாசக்தியாகிய சர்வசக்தியை நோக்கிச்செல்லும். நிறைவு குறைவு இல்லாததாய் என்றும் ஒரே தன்மையதாய், நிர்விகாரமாய், சொரூபவிலக்கணங் கூறப்படாததாய், எங்கும் நிறைந்துள்ள அந்தச் சர்வசக்தியே அவைகளையெல்லாம் தான் கிராகியம் செய்துகொண்டு அவற்றைப் பரிபாகப்படுத்தும். ஜனன மரணங்களினால் நொந்த ஜீவான்மாக்களைத் தன்னிடத்தில் களையாறச்செய்து அவற்றின் கன்மங்களையும் பரிபாகஞ் செய்யும். எல்லாம் பரிபாகமடைந்த பின் மறு சிருஷ்டியுண்டாகும்.

இதுவே பிரதம சிருஷ்டியாம். இதனால் சகல பதார்த்தங்களிலுமிருக்கும் சக்திகளெல்லாம் ஓர் இடத்தில் நிறைதலும், குறைதலும், பெருகுதலும், சுருங்குதலும், உற்பத்தியும், நாசமும் இல்லாமற் சிறந்து நிற்கும்.

அவ்விடமாகிய பொருளே சர்வசக்தியாம். சூரியன் தான் இருந்த இடத்திலேயே நிற்க அதன் கிரணங்கள் எல்லாவற்றுக்கும் ஒளியையும் வெப்பத்தையுங் கொடுத்துப் பிரபஞ்சத்தைக் காப்பதுபோல அந்தச் சர்வசக்தியும் தன்னிலே பெயராது நிற்க, அதன் சக்தி எங்கும் வியாபித்துச் சந்திரன், சூரியன் இவற்றுக்கு ஒளியையும் தண்மை வெப்பங்களையும் கொடுத்து உலகத்தை நடத்தும். அந்தச் சக்தியில்லாவிடில் சூரிய சந்திரர்களுக்கு ஒளியாதியும், வாயு முதலியவற்றுக்கு இயங்கும் சக்தியும் இல்லையாம். இதனால்தான் சர்வசங்கார காலத்தில் சூரியசந்திரர்களும் நட்சத்திரங்களும் இல்லையென்று சுருதி கூறிற்று. பஞ்சபூதங்களிலும் இந்தச்சக்தி வியாபித்து அந்தர்யாமியாய் நிற்கும். அதனாலே தான் "வானெரியனல் கான் மண்ணெனவகுக்க வரும்பெரும் பூதமோரைந்தும், ஆனமுக்குணமும் கரணமோர் நான்கு மனைத்துமா யாதியீறின்றி, யூனுடை யுடலுக் குயிருமாயுயிருக்குணர்வுமா யொன்றினுந்தோயா, ஞானநாயகனே கருவையம்பரனே நானறிந்துரைக்குமா றெவனோ" என்று முன்னோர் பஞ்சபூதாதிகளையும் பரத்துக்குச் சரீரமாகக் கூறியுள்ளார். அது ஊனக்கண்களுக்குப் புலப்படாத நிலைமையை யுடையதாதலால் பஞ்சபூதங்களையும் அதற்குச் சொரூபமாகக் குறித்துவணங்குவார் அறிவிற்சிறந்தோர். பிரபஞ்சத்தோற்ற நாசங்களுக்கு ஆதாரமாய் நிற்பதாதலால் அந்தப்பரத்துக்குச் சர்வசக்தி யெனறும், என்றும் உள்ளதாகையால் சத்தியமென்றும், ஞானமயமாதலால் சித்து என்றும், துன்பமற்ற சுகவடிவமாதலால் ஆனந்தமென்றும் வேதம் அதற்குப் பல பெயர்கள் கூறின. இவ்வாறு சர்வத்திலும் நிறைந்தும், அவற்றைப் பிரேரேபிப்பது மாதலால் அதனைச் சர்வசக்தி யென்றும் கூறும். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## அவமரியாதையான வழக்கங்கள்.

"எல்லோரையும் சிறிதுகாலம் ஏமாற்றலாம்; சிலரை எல்லாக் காலத்திலும் ஏமாற்றலாம் என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. இதனாலேயே எல்லோரையும் எல்லாக்காலங்களிலும் ஏமாற்ற இயலாதென்பது நன்கு விளங்குகின்றது. இப்போது நமது தேசத்தில் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கல்வி (இவர்கள் கற்பது கல்விதானா என்பது வேறு கேள்வி) பயின்றுவரும் மாணவர்களுள் சில தப்பபிப்பிராயங்கள் பரவிவருகின்றன. நமது முன்னோர்கள் அறிவிலிகளென்றும் வெள்ளையர்கள் வந்த பின்னர் தான் நமக்கு மோட்டார்வண்டி முதலிய நாகரிக வஸ்துக்கள் கிடைத்தன வென்றும் இன்னும் பல வேறுவிதமாகவும் கருதுவதோடு நமது முன்னோரின் ஆசார சீர்திருத்தங்களைப் பகிரங்கமாகக் கண்டிப்பதை நாம் பார்க்கிறோம்.

மேல்நாட்டு நாகரிகத்தில் கிடந்துழலும் தற்காலத்தில் "நல்லதைச்

செய்" என்றொருவன் முன் வருவானுனல் அதனைக் கேட்பவர் சிலரே. இம்முறை முன் யுகங்களுக்கே பொருந்தும். இக்காலத்தில் நமது போதனையை "கெட்டதைச் செய்யாதே அதை ஒழித்துவிடு" என்று சொல்வதே உசிதமாகக் காண்கிறது. காலத்திற்குத் தகுந்தவாறு போதனு முறைகளையும் மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

மஹாத்மா காந்தியின் முறைகளை ஆராய்வோம். சுருங்கக்கூறின் அவரது எண்ணங்கள் மூன்று. அவையாவன 1. சுதேசக்கைத்தொழிலான கதரைப் பிரபலப்படுத்தல். 2. தேசீய பள்ளிக்கூடங்களை நடத்தி வருதல். 3. 'காங்கிரஸை'ப் பலப்படுத்தல். இவைகளை நேராகப் போதிக்காமல் இவைகளுக்குப் பெருந்தடையாக விருக்கும் அந்நிய ஆடை பஹிஷ்காரம் 1. தற்கால ராஜாங்கத்தின் ஆதரவின்கீழ் நடைபெறும் பள்ளிகளின் பஹிஷ்காரம் 2. சட்டசபைகளைப் பஹிஷ்கரித்தல் 3. இவைகளை முதலில் செய்யும்படி கேட்டுக்கொண்டார்.

இவ்வாறு நல்லொழுக்கங்களைப் பிள்ளைகளுக்குப் போதிக்குமுன்னர் அதை ஓங்காமல் ஒடுக்கும் தீயவொழுக்கங்களைத் தவிர்த்து நல்லொழுக்கங்களுக்கு இடம் தேடிவைத்துக்கொள்ளக் கேட்டுக்கொள்வதே ஏற்புடைத்தாம். விதிகளை வற்புறுத்த விலக்குகளை நீக்குதல் இன்றியமையாதது. உலகப்பிரசித்தமான வேதம் விதி விலக்குகளாலாகிய நூலென்பது வெள்ளிடைமலை.

பொதுவாக எல்லோரும் முக்கியமாகப் பள்ளிச்சிறூர்களும் நீக்கவேண்டிய சில அவமரியாதையான வொழுக்கங்களைக் கீழே காணலாம்.

(1) இரைச்சல் உண்டாகும் வண்ணம் உரத்துச் சிரித்தல்.

(2) ஓர் கூட்டத்திற்குச் சென்று, ஆங்கு உபந்நியாசகரோ அல்லது அக்கிராஸனுதிபதியோ பேசிக்கொண்டிருக்கையில் அலட்சியமாக வேறேதோ வொன்றைப் படித்துக்கொண்டிருத்தல்.

(3) ஓர் கூட்டத்தில் யாராலும் வேண்டிக்கொள்ளப் படாமல் தானுகவே உரக்கப்படித்தல்.

(4) பிறர் படித்துக்கொண்டிருக்கையில் பேசுதல்.

(5) பீடி, சிகரெட்டு முதலியன பிடித்தல். (கள்ளைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை).

(6) அமிதமாக வெற்றிலைப்பாக்கு போட்டுக்கொண்டு மென்றுகொண்டிருத்தல்.

(7) வீட்டைச்சுற்றித் துப்புதல்.

(8) ஓர் கூட்டத்தில் கை அல்லது கால் நகங்களை நீக்கல்.

(9) தன்னைக்காட்டிலும் பெரியோரை, முக்கியமாகப் பெற்றோரைத் திருத்துதல்.

(10) ஓர் அந்நியனுக்கு ஆசனமளிக்காதிருத்தல்.

(11) அந்நியரை உற்று நோக்குதல்.

(12) பெற்றோர்க்கு அருவருப்பைத் தரக்கூடிய மரியாதைக்குக் குறைவான காரியங்களைச் செய்தல்.

(13) வந்தன மளிக்காமல் ஓர் வஸ்துவைப் பெற்றுக்கொள்ளுதல்.

(14) தான் சொல்லும் கதைக்குத் தன்னையே கதாநாயகனாக்கிக் கொள்ளுதல்.

(15) பிறர் தவறைக்குறித்து ஏளனமாகச் சிரித்தல்.

(16) பிறர் பேசி முடிக்குமுன்னரே பேச வாரம்பித்தல்.

(17) இதரர்களைக்கேட்ட கேள்விக்குத்தான் விடையளித்தல்.

(18) ஓர் கூட்டத்தில் என்ன விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறார்களென்பதை அலட்சியமாகக் கவனியாதிருத்தல்.

மேற்சொன்ன விலக்குகளைத் தங்களது சத்துருக்களாகப் பாவித்து விட்டொழிப்பின், நன்னடக்கைக் கட்டிடத்திற்கு ஓர் ஸ்திரமான அஸ்திவாரம் நாட்டியதாகும்.

---

## ஓர் சந்தேகம்.

பத்திரிகாசிரியரவர்கட்கு, சென்ற கார்த்திகைத் திங்கள் வெளியான நமது ஆனந்தனில் ' குடம்பை '' எனும் சொற்பொருளைப்பற்றிய ஆராய்ச்சியினை வரைந்துள்ள பெரியார் தொ. மு. பாஸ்கரன் அவர்கள் தமது ஆராய்ச்சியில் 6-வது எண் உள்ள பாராவில் உவமை கூறுமிடத்து "கங்கை குல திலகராம் காராளர் மரபிலுதித்த பட்டினத்தடிகள்'' என மொழிந்துள்ளார்கள். கங்கை குல திலகராம் காராளர் மரபு எனின் வேளாளர் மரபாகுமன்றோ. அடிகளார் புராணத்தில் வைசிய வகுப்பார் என்றல்லவோ கூறப்படுகின்றது : இதனால் காராளர் வைசியரா வைசியர் காராளரா என்ற சங்கை உண்டாகுமல்லவா. இதைச் சஞ்சிகை வாயிலாக நிவர்த்திக்க வேண்டுகிறேன்.

வஙி. முத்தையாபிள்ளை.

குறிப்பு:—ஜாதிப்பிரிவினையில், பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வகுப்புகளே யுண்டு. இவற்றில் வேளாளர் வைசிய வகுப்பைச் சேர்ந்தவர்களாவர். வைசியரில் பூவைசியர் (பூமியைப் பண்படுத்தியுழுதுண்டு ஜீவிப்போர்), கோவைசியர் (உழவுத்தொழிலுக்கு அவசியமான கால்நடைகளை வளர்த்துப் பெருகச்செய்வோர்), தனவைசியர் (வாழ்க்கைக்கு வேண்டிய பண்டங்களை ஒருவிடத்திலிருந்து மற்றொரு விடத்திற்குக் கொண்டுபோய் நியாயமான இலாபத்திற்கு விற்றுத் தனம் சம்பாதிப்போர்.)

இவர்களே மனிதவர்க்கம் ஜீவிப்பதற்கு இன்றியமையாதவர்கள்-

இதற்குமேல்தான் ஜனங்களுக்குக் கள்ளர், பகைவர் முதலியவர்களால் ஆபத்து நேராவண்ணம் அவர்களைப் பாதுகாக்க க்ஷத்திரியரும், தெய்வ வழிபாட்டையும் ஆன்மார்த்த விஷயங்களையும் உபதேசிக்கப் பிராம்மணரும் வேண்டும்.

வேளாளர் தங்களை வைசியர் என்று கூறிக்கொள்வதை விட வேளாளர் என்று கூறிக்கொள்வதையே கௌரவமாகவும் சிரேஷ்டமாகவும் கருதுகிறார்கள். ஏனெனில் உலகில் மனிதவர்க்கம் தோன்றியபின் முதல் முதல் உண்டான தொழில் வேளாண்மையே. அதுவே மனிதர் உயிர்வாழ்வதற்கு அத்தியாவசியமான தொழில். ஆகையால் ஆதியில் யாவரும் வேளாளராக விருந்தே, பிறகு வரவர வெவ்வேறு தொழில்களின் அவசியம் ஏற்பட்டு தொழில்களைப்பகிர்ந்து கொண்டபோதே பிரிவினையுண்டாகி, போகப்போக அது ஜாதிப்பிரிவினைகளாக மாறிவிட்டன. எப்போதும் வேளாளன் தொழிலே ஜனசமூகத்திற்கு இன்றியமையாததும் மற்ற எல்லா வகுப்பாரின் உயிர்வாழ்க்கைக்கும் ஆதாரமானதும், செங்கோல் நடப்பதற்கே இன்றியமையாததுமாயிருக்கிறது.

இக்காரணங்களால் வேளாளர் தங்களை வேளாளர் என்று மட்டுமே கூறிக்கொள்வதோடு திருப்தி யடைந்திருக்கிறார்கள். அவர்கள் தங்களை வேறு உயர்ந்தவகுப்பைச் சேர்ந்தவர்களாகக் கூறிக்கொள்வதில்லை. யாரேனும் அறியாமையால் தங்களைத் தாழ்ந்தவகுப்பார் என்று கூறினும் வேளாளர் அதை யெள்ளளவும் பொருட்படுத்த மாட்டார்கள். ஏனெனில் ஈசுவர சிருஷ்டியில் தங்களுக்குக் கிடைத்திருக்கும் நிலைமை இன்னொருவர் வாயால்கூறி தாழ்த்திவிடக் கூடியதல்லவென்பதை யவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்.

இனி, மேலே நமது நண்பர் வெளியிட்ட ஐயத்தில் கேட்ட கேள்விக்கு விடை யென்னவெனில், வேளாளர் வைசியவகுப்பைச் சேர்ந்தவர்களே. ஆனால் வைசியர் அனைவரும் வேளாளரன்று. பட்டினத்தடிகள் தனவைசியர் வகுப்பைச் சேர்ந்தவரே. முன்னோரால் கூறப்பட்ட அவர் புராணத்தில் அவ்வாறே கூறப்பட்டிருக்கிறது. ஆனால் நண்பர் மகா-௱-௱-ஸ்ரீ. தொ. மு. பாஸ்கரன் என்பவர் வரைந்த விஷயம் 'குடம்பை' என்ற பதத்தைப்பற்றிய ஆராய்ச்சியே யாதலால் பட்டினத்தடிகளுக்கு அடைமொழிகளாக "கங்கைகுல திலகராம்காராளர் மரபிலுதித்த" என்ற சொற்றொடர் அவரால் கவனிக்கப்படவில்லை.

பத்திரிகாசிரியர்.

## மாதர் நீதி மஞ்சரி.

(178 - ம் பக்கத் தொடர்ச்சி.)

விவாகமாகாமல் தாய் வீட்டிலிருக்கும் பெண்களின் கடமைகள் இன்னும் பலவுளவெனினும், அவர்களுடைய நன்னடக்கைக்கு அவர்களது

தாய்மார்களே காரணராயிருத்தலின் அவற்றைவிட்டு விவாகஞ் செய்து கொண்ட மாதர்களின் கடமைகளைச் சிறிது கூறுவோம்.

மாதர்கள் தங்களுக்குப் பெரும்பாலும் புக்ககமே நிலையாவதன்றித் தாய் வீடல்ல என்பதை மறக்கலாகாது. இதை மறவாமலிருந்தால் தாம் புகுந்த வீட்டில் அதாவது கணவர் வீட்டிலுள்ளவர்களோடு ஒற்றுமையாய் வாழ்வது சாத்தியமாகும். ஒரு பெண் விவாகஞ்செய்து கொண்டவுடன் மாமன் மாமி நாத்தி ஓரகத்தி முதலானவர்களைத் தன் தாய்தந்தை சகோதரரைப்போலக் கருதி அவர்களுடன் ஒற்றுமையாய் வாழவேண்டுமென்று நினைக்கவேண்டுமே யன்றி, கணவனும் தானும் தனித்திருந்து குடித்தனம் செய்யவேண்டுமென்று எண்ணலாகாது. 'சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை'. ஐக்யமும், ஒற்றுமையும், சமாதானமும் உள்ள குடும்பமே சிறந்த குடும்பமாகும். தனிக்குடித்தனம் சிறப்புடையதாகாது. அதனால் உண்டாகும் துன்பங்கள் பல. சேர்ந்து வாழ்வதால் துன்பங்களுண்டாவதாயிருந்தாலும் அதனால் நேரிடும் நன்மைகளை நோக்குமிடத்து அத்துன்பங்கள் அற்பமாம். மாமி முதலானவர்கள் கொடியவர்களாயிருந்தாலும் தான் நடந்துகொள்ளும் விதத்தால் அவர்களைத் திருத்தித் தன் மீது பிரியமுள்ளவர்களாகும்படி செய்வது பெரிய காரியமல்ல. அதைவிட்டு அவர்கள் தனக்குப் பகைவர்கள் என்னும் எண்ணங்கொண்டு தாறுமாறாக நடந்தால் கலகம் ஏற்பட்டு அக்குடும்பம் சீர்கேடடைந்து விடும். பெண்கள் சண்டை முடிவில் ஆண்கள் சண்டையாகி, பெற்றோர்க்கும்-பிள்ளைக்கும், அண்ணனுக்கும்-தம்பிக்கும் மனவருத்தம் நேர்ந்து ஒரு காலத்தில் குடுமிபிடித்துச் சண்டையிடும்படியான நிலைமை வந்துவிடும். கணவன் மானியாயிருந்தால் 'இதென்னடா பெரிய சங்கடமாயிருக்கிறது. கலியாணம் செய்துகொண்டதும் போதும்; கஷ்டமனுபவிப்பதும் போதும்' என்று மனம் புழுங்குவான்.

வீட்டிற்குள் நுழைவது அவனுக்குப் புலியின் குகைக்குள் நுழைவது போலிருக்கும். இவ்வாறு கணவனுடைய மனம் புண்படும்படியாகச் செய்வது மனைவிக்கு அழகாகுமா? அதைவிட ஓர் மனைவி தன் கணவனுக்குச் செய்யும் துன்பம் வேறில்லை. ஆகையால் விவாகம் செய்துகொண்ட பெண், தன் மாமன் மாமிமார்களுக்கடங்கி அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்தொழுகல் வேண்டும். அவளே புத்திசாலி; சமர்த்தி; பதிவிரதை.

சில வருஷங்களுக்கு முன் ஒரு கிராமத்தில் ஒரு குடியானவனிருந்தான். அவனுக்கு ஏழு ஆண் பிள்ளைகளிருந்தார்கள். அவ்வேழு பேருக்கும் விவாகமாயிற்று. அவர்கள் வயிற்றில் முப்பத்திரண்டு குழந்தைகள் பிறந்தன. அவ்வெழுவரும் தங்கள் தங்கள் கடமைகளைச செவ்வையாகச் செய்துவந்தனர். அவர் தம் மனைவியரும் அப்படியே மாமன் மாமிகளுக்கடங்கி அவர்கள் சொற்படி நடந்து, சண்டை சச்சரவின்றிச் சமாதானமாய்

தங்கள் வேலைகளைச் செய்துவந்தார்கள். யாவரும் ஒற்றுமையாய் உழைத்த தால் நாளுக்கு நாள் செல்வமும் அதிகரித்துக்கொண்டே வந்தது. அப் பிள்ளைகளும் பெரியவர்களானார்கள். அவர்களுக்கும் விவாகம் நடந்தது. அவர்களுக்கும் பல குழந்தைகள் பிறந்தன.

சகோதரிகளே! இக்குடும்பத்தில் மொத்தம் எத்தனைபேரிருப்பார்க ளென்று நினைக்கிறீர்கள். குறைந்தபக்ஷம் நூறுக்குக் குறைவில்லை. சாப் பாட்டிற்கு உட்கார்ந்தால் மூன்றுபந்தி நான்கு பந்தியாகும். இக்குடும்பம் நித்யகல்யாணக் குடும்பமல்லவா? இப்படியுமிருக்குமோ? வென்று சந்தேகம் வேண்டாம். இது உண்மையான விஷயமேயன்றிக் கட்டுக்கதை யல்ல. நம் நாட்டுப் பண்டைக்கால குடும்பங்களெல்லாம் இப்படித்தா னிருந்தன.

அக்குடும்பத் தலைவர்கள் தாங்கள் மிகவும் வயோதிகர்களாய் விட்ட மையாலும், தங்களுக்குப் பிறகு ஒற்றுமைக்குப் பங்கம் வந்துவிடுமோ என்னும் சந்தேகத்தாலும், பொறாமைக்காரர்கள் கண் திருஷ்டிபட்டால் தீமை சம்பவிக்குமே யென்ற பயத்தாலும், உள்ள ஆஸ்தியைப் பங்கிட்டுக் கொடுத்து எல்லோரையும் தனித்தனி வீடுகளில் குடியமர்த்திவிட்டார்கள். அவ்வொரு குடும்பமே ஒரு கிராமமாய்விட்டது.

இப்பொழுது அக்குடும்பம் அவ்வளவு ஒற்றுமையாய் வாழ்ந்ததற்கு யார் காரணராயிருந்தவர்? பெண்களேயன்றோ? பெண்களுக்குள் ஒற்றுமையில்லாமலிருந்தால் அக்குடும்பம் எப்பொழுதோ சின்னபின்னப் பட்டுப் போயிருக்கும். ஆதலால்,

விவாகஞ் செய்துகொண்ட மாது தன் அருமையான கணவனைப் பெற்று வளர்த்த மாமன் மாமிகளைத் தன் பெற்றோரைப்போல நேசித்து அடங்கி நடத்தல்வேண்டும். இதுவே அவளுடைய முதற்கடமை.

**இரண்டாவது.**—கணவனுடன் பிறந்தோர், ஓரகத்திகள் முதலான வர்களிடம் பட்சமாய் நடந்துகொள்ள வேண்டும். கணவனைத் தன்னைச் சேர்ந்தவனென்றும், அவன் வீட்டைத் தன் வீடென்றும், அவன் பொரு ளைத் தன் பொருளென்றும் சொந்தம் பாராட்டுவதுபோல, அவனைச் சேர்ந்தோரையும் தன்னைச் சேர்ந்தோராகப் பாவித்து, அவர்களுடைய நன்மை தீமைகளைத் தன்னுடைய நன்மை தீமைகளாகவெண்ணி, அவர் களுக்கு வேண்டியவற்றைச் செய்யவேண்டும். ஒருவேளை கணவனே அவர்களை வெறுத்தாலும் தான் அவர்களுக்காகப் பரிந்துபேசி அவர்களை ஆதரிக்கவேண்டும்.

**மூன்றாவது.**—கணவன் கட்டளையை மீறி நடத்தல் கூடாது. இதுவே கற்பென்று சொல்லப்படுவது. 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்றார் ஒளவைப்பிராட்டியார். கணவன் எதைச் செய்யச்சொன்னாலும் உடனே அவன்மனங் கோணாதபடி அக்காரியத்தைச் செய்தல் வேண்டும். அவனுக்குப் பிரியமில்லாத காரியத்தைச் செய்யலாகாது.

**நான்காவது.**—கணவனுடைய சம்பாதனையால் கிடைத்த பொருள் மிகச் சொற்பமாயினும், அதைக்கொண்டு திருப்தியடைந்து அவ்வருவாய்க்குத் தக்கபடி செட்டாகச் செலவுசெய்து தன் வீட்டு ஊழல்களைப் பிறரறியாதபடி கௌரவமாய்க் குடித்தனம் செய்யவேண்டும். கணவனுடைய கையில் பணமில்லாததை யறிந்தும் 'அதுவேண்டும், இதுவேண்டும்' என்று வாதாடி அவனை அலைக்கழிக்கலாகாது.

**ஐந்தாவது.**—வீட்டையும் வீட்டுச் சாமான்களையும் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைத்து, கூடுமானவரையில் குடும்பத்திலுள்ளவர்கள் ஆரோக்கியமும் ஆனந்தமும் உள்ளவர்களாக இருக்கும்படி பார்த்துக் கொள்ளல் வேண்டும்.

**ஆறாவது.**—வீட்டில் யாதொரு வேலையுமில்லாமலிருக்குங் காலத்தில் குட்டிபோட்ட நாய்போல், வீடு வீடாக நுழைந்து 'அவள் அப்படி, இவள் இப்படி' என்று உப்புக்கும் ஊறுகாய்க்கும் உபயோகமில்லாத வார்த்தைகளைப் பேசி, ஊரிழவை யெல்லாம் தூக்கித் தலைமேல் போட்டுக்கொண்டு திரியலாகாது. வீண் வம்பு சண்டைவருவது இதனால்தான். எப்போதும் நாம் பேசும் பேச்சுகள் நமக்காவது பிறருக்காவது, இகத்திற்காவது பரத்திற்காவது ஏதேனும் பயனைத் தரக்கூடியவைகளாக இருத்தல் வேண்டுமேயல்லாமல், ஒரு பிரயோஜனமுமில்லாத சொற்களைப் பேசலாகாது. 'அவ்வாறு பேசுவோர் மனிதராகார்' என்று கூறுகிறார் திருவள்ளுவர். ஆகையால் வேலையில்லாதிருக்கும் சமயங்களில் நல்ல புஸ்தகங்களைப் படித்தல் அல்லது தையல் முதலிய காரியங்களைச் செய்தல் மிகவும் நல்லது.

**ஏழாவது.**—கோபம், அகங்காரம் வெடித்த சொல் முதலிய தீக்குணங்களில்லாமல் சகிப்புத்தன்மை, தன்னடக்கம், மிருது வசனம் முதலிய நற்குணங்களைக் கொண்டிருத்தல் வேண்டும்.

**எட்டாவது.**—அன்னிய ஆடவரைத் தந்தையராகவும் சகோதரராகவும் பாவிக்கவேண்டும். பிறருடைய அழகு செல்வம் மேன்மை முதலியவற்றைக் குறித்து அடிக்கடி பேசுதலும், பிறர் பேசக்கேட்டலும் அநுசிதமாகும். தெருவாயிலில் நின்றுகொண்டு போவாரையும் வருவாரையும் பார்த்தவண்ணம் இருத்தலாகாது. தனிவழி போதலும் கூடாது.

**ஒன்பதாவது.**—பிள்ளைகளை நல்லொழுக்கத்திற பழக்குவதில் வெகு சாக்கிரதையா யிருக்கவேண்டும். அவர்கள் கெட்டவார்த்தைகளைப் பேசாமலும் கெட்ட காரியங்களைச் செய்யாமலுமிருக்கப் பார்த்துக் கொள்ளவேண்டும். 'அப்பாவை உதை, அண்ணனைத் திட்டு' என்னுமிவைபோன்ற சொற்களைக் கற்பிக்கலாகாது. அவை அப்பொழுது செவிக்கினிமை யானவையாகத் தோன்றும். அவ்வார்த்தைகளே அப்பிள்ளைகள் பெரியோராகுங் காலத்துப் பேசினால் வெறுப்பை யுண்டாக்குமல்லவா? அவர்களே அப்படிப் பேசினாலும் 'அது தப்புவார்த்தை, அப்

படிச்சொல்லாதே' என்று இனிமையாகப் பேசி அதைத்தடுத்தல் அவசியம். பிள்ளைகளை எதிரில் வைத்துக்கொண்டு தீயவார்த்தைகளாடுதல் முதலிய எவ்வகைத் தீக்காரியத்தையும் செய்யலாகாது. பெரியோர் செய்கிறபடி செய்ய முயல்வது சிறுவரின் சுபாவம். ஆகையால், பிள்ளைகளின் நன்மையை விரும்பியாவது பெற்றோர் நல்லொழுக்கத்தில் நடந்து காட்ட வேண்டும்.

**பத்தாவது.**—பெரியாரைப் பணிதல், தெய்வபக்தி, தானதருமம் முதலிய இல்லற வொழுக்கங்களைத் தவறுமல் கடைப்பிடித்தொழுகல் வேண்டும்.

இவ்வாறு விவாகமான பின் மாதர் அனுஷ்டிக்கவேண்டிய கடமைகள் இன்னம் அநேகமிருக்கின்றன. அவற்றைத் தனித்தனியாக எடுத்துக் கூறுதல் அசாத்தியமான காரியம். ஆகையால், சில முக்கியமான விஷயங்களை மட்டும் இங்குச் சுருக்கிக்கூற நேர்ந்தது. இனி, மாதர், மேற்கூறியவாறு இல்லற நடத்தி மக்களைப்பெற்று அப்பிள்ளைகளுக்கு மணம் முடித்து மருமக்களைப் பெற்றகாலத்து அவர்தம் கடமைகள் யாவை? என்பதை யாராயவேண்டிய தவசியமாகலின் அவற்றையும் சிறிது விளக்குவாம்.

மாமியானவள் மருமகளை மகளைப்போலப் பாவிக்கவேண்டும். உண்மையில் யோசிக்குமிடத்து மருமகளே அவளுக்கு உற்ற துணையாயிருந்து அந்தியகாலத்தில் உதவி செய்பவள். மகளோ வேறு வீட்டிற்குப் போய் விடுவாள். 'ஆற்றிற்கு அக்கரையிலுள்ள பெண் ஆபத்திற்குதவாள்' என்பது ஆன்றோர் அனுபவமொழி. மாமி அவளை மகளைப்போலக் கருதியொழுகினுல் அவளும் மாமியைத் தாயெனக்கருதி அன்புகொள்வாள். இந்நிலைமையில் மாமிகளுக்கு மிக்க பெருந்தன்மையான குணம் வேண்டிய தவசியம். மருமகள் தன் மகனுக்குப் பிரியமானவள் என்பதை மாமி மறக்கலாகாது. அவள் ஏதாவது தப்பிதம் செய்தாலும் இனிய வார்த்தைகளால் அவளைத் திருத்தவேண்டுமே யன்றி அதிகாரம் வந்துவிட்டதே யென்று தாறுமாறுகத் திட்டுவதும் இம்சிப்பதும், கண்டவர்களிடத்திலெல்லாம் சொல்லித் தூற்றுவதும் அடாத செய்கைகளாம். அதனுல் உள்ள மரியாதை போய்விடும். "ஓர் ஊரில் ஒருத்தி தன் மருமகளைக் கொள்ளிக்கட்டை கொண்டு அடித்தாள். மருமகள் மரியாதைக்கு இரண்டடிகளைப் பொறுத்துக்கொண்டாள். மூன்றுவதடியும் விழுந்தது. வந்துவிட்டது கோபம் அவளுக்கும். கையில் தயாராய் வைத்துக்கொண்டிருந்த விளக்கு மாற்றினுல் வைத்தாள் மாமியாரை." இவவாறு காரியம் மிஞ்சிப்போன பிறகு என்னசெய்வது? 'பெருமையும் சிறுமையும் தான் தர வருமே'. மகனுக்கும் தாயாரிடத்தில் வெறுப்புண்டாய் விடும். தாயார் தன் மனைவியிடம் பிரியமாயிருப்பதாகத் தெரிந்தால் மகன் தாயாரைக் கௌரவப்படுத்தி எக்காரியத்தையும் தாயாரின் உத்தரவின்படி செய்வான். பல சொல்வானேன்? மாமியானவள் மருமகளைத் தன் மகளைவிட

ஒருபங்கு அதிகமாக நேசிக்கவேண்டும். இந்த எண்ணம் ஒன்றுமாத்திர மிருந்தால் போதும். எல்லா மேன்மைகளும் உண்டாகும் (தொடரும்)

**பூ. ஸ்ரீநிவாசன்**, தமிழ்ப்பண்டிதர்,
சித்தூர்.

**குறிப்பு**:—இதனைப் பெண்மக்களனைவரும் கவனிக்கவேண்டுவது அவசியம். இதிற்கூறியபடி நடப்பவர்களே தாங்கள் பிறந்த வீட்டுக்கும் புகுந்த வீட்டுக்கும் பெரும் புகழை நிலைக்கச் செய்வதுடன், மாமிமார் நாத்திமார் முதலிய யாவராலும் 'குலதெய்வம்' என்று கொண்டாடப் பெறுவார்கள். பின்னும் '**ஆயிரங்காலத்துப் பயிர்**' என்று தங்களுக் கேற்பட்டுள்ள உயர்தரப் பெயரையும் சிறப்பித்துக் கொள்ளுவார்கள். இல்லறத்திற்குத் தகுந்த நல்ல குணங்களும் நன்னடக்கைகளும் பெண் மக்களிடம் இல்லாவிடின், அந்த வாழ்வானது ஐசுவரியத்தால் எவ்வளவு மேம்பாடடைந்திருந்தாலும், பயனற்றதாம்.

சகல கலாபண்டிதோத்தமராகிய ஆஞ்சநேயர், ஸ்ரீராமபிரானிடம், ஒரு சமயம், சீதாபிராட்டியைக் குறித்துப் பேசியபோது,

* "உன் பெருந்தேவி யென்னும் உரிமைக்கும் உன்னைப்பெற்ற, மன்பெருமருகி யென்னும் வாய்மைக்கும் மிதிலை மன்னன், தன் பெருந் தனையை யென்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்" என்றும்,

* "உன்குலம் உன்னதாக்கி உயர்புகழ்க்கு ஒருத்தியாய
தன்குலம் தன்னதாக்கித் தன்னையித் தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக் கீந்து வானவர் குலத்தை வாழ்வித்து
என்குலம் எனக்குத் தந்தாள்" என்றும் புகழ்ந்துள்ளார்.

ஆகையால், பெண்மக்கள் சுகம் அனுபவிக்கும் காலத்திலும், துக்கம் அனுபவிக்க நேர்ந்த காலத்திலும் சம நிலையிலிருந்து குடும்பத்தாக்கும் பிறர்க்கும் தம் விஷயத்தில் சந்தோஷமும் நன் மதிப்பும் உண்டாகும்படி கண்ணுங்கருத்துமா யிருந்து நடந்துகொள்ள வேண்டும். அவ்வாறு நடந்துகொள்பவரே சீதாபிராட்டியைப் போல் புகழப்படுவார்கள்.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(275-ம் பக்கத் தொடர்ச்சி.)

## பதினேழாவது குணவிகார அத்தியாயம்.

[கருமத்தைச் செய்பவர் மூவகையாவர். சிலரோ, நூல்விதியை யறிந்தும் சிரத்தையில்லாமையினாலே, அந்த விதியைவிட்டுத் தங்கள் இச்சைப்

---

* [உரிமை-பாத்தியதை ; மன்-தசரதன் ; வாய்மை-உண்மை ; தனையை-மகள் ; தகைமை-பெருமை ; தலைமை சான்றாள்-முதன்மையாக நின்றாள் ; உன்குலம்-புகுந்தவீடு ; தன்குலம்-பிறந்தவீடு ; தனிமை-பிரிவு ; செய்தான்-செய்த இராவணனுடைய ; வன்குலம்-கொடிய குலம் ; கூற்று-எமன் ; என்குலம்-தாசத்துவம் (தொண்டக்குலம்).]

படி சிறிது கருமத்தைச் செய்வர். அவர் எல்லாப் புருடார்த்தங்கட்கும் அயோக்கியராதலின் ஆசுரர் ஆவர். சிலரோ நூல்விதியையறிந்து மிகுந்த சிரத்தையுடையராய் அவ்விதி முறையே நிஷேதகருமத்தை நீக்கி விதித்த கருமத்தைச் செய்வர்; அவர் புருடார்த்தம் யாவற்றிற்கும் பொருந்திய வராதலின் தேவராவர் என்னும் இப்பொருள் 16-வது அத்தியாய முடிவில் முடிக்கப்பட்டது. இனி எவர்கள் நூல்விதியை ஆலசியம் முதலிய தோஷ வசத்தால் விடுத்துத் தங்கள் தந்தை முதலான பெரியோர்களின் வியவகாரத்தை யொட்டிச் சிரத்தையோடும் கெட்ட காரியத்தைவிட்டு விதித்தவற்றை யனுஷ்டிப்பார்களோ, அவர்களிடத்தில் ஆசுரதருமமும் தேவதா தருமமும் பொருந்தும்; நூல் விதியை விடுத்தல் ஆசுரதருமமாம்; சிரத்தையோடும் விதித்ததைச் செய்தல் தேவதாதருமமாம். அவ்விரண்டு தருமத்தோடுங்கூடிய அவர்கள் ஆசுரர்களில் அடங்குவாரா அல்லது தேவதைகளிலடங்குவாரா என்னும் சந்தேகத்தை யடைந்த அருச்சுனன் ஸ்ரீ பகவானிடத்தில் வினவுதல்.]

**பார்த்தன்:**—ஏ பரந்தாமா! எவர்கள் நூல் விதியை விடுத்துச் சிரத்தையோடுங் கூடினவராகித் தேவபூசை முதலியவற்றைச் செய்வார்களோ, அவர்கட்கு மீளவும் எந்த வகையான நிஷ்டையானது வரும்? சாத்துவிகமா? இராஜசமா? தாமதமா?

(தேவதா புருடர்கள் சுருதியாதி சாஸ்திரங்களை அனுசரிப்பர். அப்படி யனுசரிக்காமல் அவற்றை யாலசியாதியால் விடுபவரும், சிரத்தையற்ற ஆசுரர்போல ஆகாமல் பிதா முதலிய பெரியோரது விவகாரத்தைப் பின்பற்றுவதில் சிரத்தையோடு கூடியவரும் ஆகியோர் தேவபூசைசெய்தால் அவர் நிஷ்டை யெத்தகையதெனலாம்? சாத்விகமானாலோ நல்ல இயல்பினராதலால் தேவரேயாவர்; இராஜததாமதமானால் இரண்டு இயற்கையுடையவராதலால் அசுரரேயாவர் என்பது அருச்சுனன் சம்சயமாம்)

[யாவர் சாஸ்திரவிதியை விடுத்துச் சிரத்தையோடும் தேவபூசை முதலியவற்றைச செய்வரோ அவர் சிரத்தை சிறிது உடையவரேயாவர். ஏனெனில் சிரத்தை மூன்றுவிதமாம்; அவற்றுள், சாத்விக சிரத்தையோடு கூடியவர் தேவர்; இவர் சுருதி கூறியதில் அதிகாரியாவது மல்லாமல் அப்பயனையும் பெறுவர். இராஜததாமத சிரத்தையோடு கூடியவர் அசுரர்; இவர் சுருதி கூறியதில் அதிகாரியாகார் அப்பயனையும் அடையார் என்று பிரித்து அருச்சுனனுடைய சம்சயத்தை நீக்க இசசித்தருளிய ஸ்ரீ பகவான் சிரத்தையை மூன்று விதமென்றருளுகின்றார்.]

**பகவான்:**—ஏ அருச்சுன! உடம்பை யபிமானித்தவர்கட்கு, அவ்வியற்கையாலுள்ள சிரத்தை சாத்துவிகமெனவும் இராஜசமெனவும் தாமதமெனவும் மூன்றுவகையாம்; அவற்றை யினி யியம்புவாம்.

சிரத்தையோடு கூடியவர் சாஸ்திரவிதியை விடுத்துத் தேவபூசை முதலியவற்றைச் செய்யின் மூன்று வகையாக மாறுவர். முன் ஜன்மத்திற்

செய்த புண்ணியபாவங்களின் சமஸ்காரம் இயற்கையாகும். அது மூன்று வகையாகும். அதனாலே சாத்விகம் இராஜசம் தாமதம் எனச் சிரத்தையும் மூவகையாம். முற்பிறப்பின் இயற்கைக்குத் தக்கபடி இப்பிறப்பிற் சிரத்தையானதுண்டாகின்றது. இயற்கையை வாசனையென்றும் கூறலாம். சாஸ்திர அபேக்ஷையில்லாமல் எவ்லாவுயிர்கட்கும் பொதுவாக இயற்கையாலுண்டாம் சிரத்தையே மூன்று வகையாகும். முன்ஜன்மவாசனையை சாஸ்திரஜன்னிய விவேகஞானத்தாலே மாற்றவும் முடியும். ஆனால், நூல் விதியைத் தாண்டியவர்க்கோ முடியாதாம். இம்மூவகைச் சிரத்தையை நீ கேட்டால் நீயே அவர்களிடத்தில் தேவத்தன்மையையும் அசுரத்தன்மையையும் நிச்சயித்துக் கொள்ளலாம்.

[முன்னர் மனத்திலிருக்கும் முற்பிறப்பின் வாசனை வடிவகாரணத்தாலே சிரத்தை மூவகை யென்றருளப்பட்டது. இப்போது அந்த சிரத்தைக்கு முதற்காரணமாகிய அந்தக்கரணத்தின் வேற்றுமையால் சிரத்தையின் வேற்றுமையைக் கூறி யருளுகின்றார்.]

**பகவான்:**—ஏ பாரத! எல்லாப் பிராணிகளுக்கும் தங்களுடைய அந்தக்கரணத்தின் அனுசாரமாகவே சிரத்தையுண்டாகின்றது. சிரத்தை மயனாக இருத்தலினாலே எவன் எந்த சிரத்தையுடையவனோ அவன் அதற்கொத்தவனேயாவன்.

சத்துவகுணத்தை முக்கியமாகவுடைய சூக்ஷ்ம பஞ்சபூதங்களினின்றும் உண்டாகிய அந்தக்கரணம் பிரகாச மயமாயிருத்தலின் சத்வமாம். தேவதைகட்கோ அதிக சத்துவத்தோடு கூடி அவ்வந்தக்கரண மிருக்கும். இயக்கர்கட்கோ இரஜோ குணத்தினாலே அழுத்தப்பட்ட சத்துவத்தோடு கூடி யவ்வந்தக்கரணமிருக்கும். பூதப்பிரேத முதலியவற்றின் அந்தக்கரணங்களோ தமோகுணத்தால் மூடப்பட்ட சத்துவ குணத்தோடு கூடியிருக்கும். மநுடருக்கோ அது அநேகமாகக் கலந்தேயிருக்கும். சாஸ்திரத்தாலுண்டாகிய விவேக ஞானத்தாலே இரஜதமகுணம் அமிழவே, அவனை உற்பூதசத்துவகுணி யெனலாம். எல்லாப் பிராணிகட்கும் தங்கள் தங்கள் மனத்தை யனுசரித்தே சிரத்தையுண்டாம். எம்மனத்தில் எக்குணம் மிகுந்துநிற்குமோ அந்தக் குணத்தின் பெயரையே சிரத்தையும் அடையும். சத்துவகுணமிகுந்திருந்தால் சாத்விக சிரத்தையை யுடைய சாத்விகனாவான். இரஜோகுணமிகுந்திருந்தால் இராஜச சிரத்தையை யுடைய இராஜசனாவன். தமோகுண மிகுந்திருந்தால் தாமச சிரத்தையை யுடைய தாமசனாவன். ஆகையால் சிரத்தையை யனுசரித்து அவனவனுடைய நிஷ்டையை யறிந்துகொள்ளலாம். (ஏ பாரத! என்று விளித்தமையாலே நீ மகாபரதவம்மிசத்திற் பிறந்தவனாகலின் சுத்த சாத்விகத்தை யுடைத்தாயிருக்கின்றாய் யென்று ஸ்ரீ பகவான் குறிப்பித்தருளியதாகும்.)

[அருச்சுனன் பகவானை நோக்கி! அவனவனுடைய சிரத்தையே அவனவனுடைய நிஷ்டையைக் காட்டும் என்று தாங்கள் திருவாய் மலர்ந்

தருளினீர்களே, அது மெய்யே என்றாலும், அந்த சிரத்தையை யறியாமல் அந்த நிஷ்டையை அறியமுடியாதாகலின் அந்த சிரத்தையை எவ்வுபாயத்தாலறிவது என்று கேட்ப, அதற்கு ஸ்ரீ பகவான், அவனவனுடைய தேவ பூசை முதலிய காரியங்களைக்கொண்டு சிரத்தையையும் தெரிந்துகொள்ள லாமென்று கூறியருளுகின்றார்.]

**பகவான்:**—ஏ அருச்சுன ! யாவர் தேவதைகளைப் பூசை செய்கின்றாரோ அவர் சாத்துவிகராவர். யக்ஷ இராக்ஷதரைப் பூசிப்பவர் இராஜதராவர். பூதங்களையும் பேய்களையும் பூசிப்பவர் தாமதர் ஆவர் என்று தெரிந்துகொள்வாய்.

சாஸ்திர ஞானமில்லாமல் இயற்கையான சிரத்தையினாலே வசுக்கள் ருத்திரர்கள் முதலிய சாத்துவிக தேவதைகளைப் பூசிப்பவர் சாத்துவிகராவர்; சாஸ்திர ஞானமில்லாமல் இயற்கையான சிரத்தையாலே இரஜோ குணமுடைய குபேராதி இயக்கரையும், நிருதி முதலிய இராக்ஷதரையும், பூசிப்பவர் இராசதர் ஆவர். நல்லுணர்வில்லாமல் இயற்கையான சிரத்தையாலே தமோகுணமுடைய பிரேதபூத முதலியவற்றைப் பூசிப்பவர் தாமதராவர் என்று தெரிந்துகொள். தங்கள் தருமங்களினின்றும் நழுவிய பிராஹ்மணர் முதலினோர் இறந்தபின் காற்றுமயமான உடம்பை யெடுத்துக் கொள்ளிவாய்ப்பேய் முதலிய பிரேதங்களாவர். பிரேதம், பேய், ஏழுமாதாக்கள் முதலியோர் பூதகணமாவர். இதனாலே சாத்விகாதி மூவரையும் பகுத்துத் தெரிந்து கொள்ளலாம்.

[இவ்வண்ணம் சாஸ்திரத்தை விட்டவருடைய சாத்விக முதலிய நிஷ்டை தேவபூசை முதலியவற்றாலே தெரிவித்தருளப்பட்டது. இராஜத தாமதரும் பூர்வபுண்ணிய வசத்தால் சாத்துவிகராகி அதிகாரிகளாகலாம். ஆனால் பிடிவாதத்தாலும் முன்செய்த பாவமிகுதியாலும், கெட்டவர்களோடு சேர்ந்துவிட்டால் இராஜததாமத இயற்கையை விடமுடியாமல் நல்ல நெறியைவிட்டுக் கெட்ட மார்க்கத்திற் பிரவேசித்து இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் வெறுந்துயரையே யடைவர் என்னும் அருத்தத்தை யருளிச்செய்கின்றார்.]

**பகவான்:**—ஏ அருச்சுன! யாவர் சாஸ்திரசம்மதமில்லாத கோரமான தவத்தைச் செய்வார்களோ, இடம்ப அகங்காரத்தோடு கூடியிருப்பார்களோ, காம இராகபலத்தோடு கூடியிருப்பார்களோ, தேகத்திலிருக்கும் பூதக் கூட்டத்தை இளைக்கச்செய்வார்களோ, சரீரத்துள்ளிருக்கும் பரமாத்மாவாகிய எம்மையும் கஷ்டப்படுத்துவார்களோ, விவேகமற்றவர்களோ, அவரை அசுர நிச்சயமுடையவரென்று தெரிந்துகொள்.

(தொடரும்.) சீடன்.

## நமது அநுதாபம் !

### ஸ்ரீமான். ஆரணி, குப்புசாமி முதலியார் அவர்கள் பிரிவாற்ருமை.

இவர் அக்ஷய வருஷம் கார்த்திகை மாதம் 22-ந் தேதி வியாழக்கிழமை பிறந்தவர். தமிழ் ஆங்கிலம் என்னும் இரண்டு பாஷைகளிலும் வல்லமை யடைந்து, ஆங்கிலத்தில் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேர்ந்தவர். சமயநூல்கள் பலவும் கண்டறிந்தவர். வேதாந்த கொள்கையில் ஈடுபட்டவர். திருவண்ணுமலை ஈசானியமடம் மகாதேவ சுவாமிகளிடம் தீக்ஷையும் உபதேசமும் பெற்றவர். மதாசாரத்தில் வழுவாதிருந்தவர். தம்முடைய 26-வது வயதில் "இந்துமத உண்மை" என்ற அரிய நூலொன்றை வெளியிட்டிருக்கின்றனர்.

கொளும்பில் சஞ்சீவிகரணி யென்னும் பத்திரிகைக்குப் பத்திரிகாசிரியராகவும், வேலூரில் வாத்திமைத் தொழிலிலும், ஆப்காரி டிபார்ட் மெண்டில் ஸால்ட் சப் இன்ஸ்பெக்டராகவும் இருந்தவர்.

ஆங்கிலத்திலிருந்து பல நாவல்களைத் தமிழ் நாட்டுக்கடுத்த பெயர், நடை, உடை முதலியவற்றுடன் மொழிபெயர்ப்பதில் மிகவுஞ் சக்திவாய்ந்தவர். அத்தகைய நாவல்களில் அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளவை அனேகம். வெளிவராத நாவல்களும் பல நம்மிடம் இருக்கின்றன. அவை யொன்றன்பின் ஞென்ருகவெளியிடப்படும். இவரால் முதலாக வெளிவந்த நாவல் 'லீலா'. பிறகு ஏறக்குறைய 75 நாவலுக் கதிகமாகவே இவர் எழுதியுள்ளார். கைவல்ய நவநீத வசனம், பகவத்கீதை வசனம் என்னும் ஞான நூல்களையும் யாவர்க்கும் விளங்கும்படி வெளிப்படுத்தி வந்தார். கைவல்ய நவநீத வசனத்தைப் பூர்த்தியாக்கி பகவத்கீதையில் பதினறு அத்தியாயங்கள் வரை எழுதியிருக்கின்ருர்.

நமது மாதர்கள் தமது பூர்வீகக் கொள்கைகளையே கைப்பற்றி நடக்க வேண்டுமென்று வற்புறுத்தி வந்தவர்.

சென்ற பத்துவருஷ காலமாக நமது ஆனந்தபோதினிக்கு விஷய தானம் புரிந்துவந்தார். சில நாள்களாக சுரத்தால் பீடிக்கப்பட்டிருந்து இரக்தாக்ஷி வருஷம் தைமாதம் 12-ந் தேதி சனிக்கிழமை (24—1—25) காலமானுர். அது விஷயமாக ஆனந்தபோதினி ஆபீசுக்கு அரை நாள் விடுமுறை கொடுத்து இப்பெருந்துயரை வெளியிட நேர்ந்தது.

முடிவாகக் கூறுமிடத்து இவருடைய பிரிவாற்ருமைக்காகத் தமிழ் மக்களாகிய ஒவ்வொருவரும் தமது பெருங்குறையை நினைத்துப் பெரிதும் வருந்துகிருர்கள். எல்லாம் வல்ல இறைவன் அவர்களின் குடும்பத்திற்கு ஆறுதலைக் கொடுத் தருள்புரியுமாறு பிரார்த்திக்கின்ரேம்.

—————

பத்திரிகாசிரியர்.

## எனது அநுதாபம்.

தமிழுலகிற்குத் திலகமென விளங்கும் சென்னையில் புரசைவாக்கத்திலுள்ள தமது இல்லத்தில் ஸ்ரீமான் ஆரணி குப்புசாமி முதலியாரவர்கள் இம்மதி 24-ந் தேதி காலை ஆறுமணிக்கு இப்பூவுலகைவிட்டு நீத்தனரென்ற

துக்க செய்தியை யறிய மிகவுந் துயருறுகின்றேன். தமிழ் நாட்டிலுலவும் மாதாந்த சஞ்சிகைகளில் பிரக்யாதி பெற்று விளங்கும் பத்தாண்டுப் பாலனாகிய "ஆனந்தன்" தமிழுலகிற்குச் சுமந்துவரும் அரிய விஷயங்களுள் எனது அநுதாபத்தையு மொன்றாகக்கொண்டு அன்னவரின் மரணத்தால் பாதிக்கப்பட்டுத் துயருறும் யாவருக்கும் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்ளுகின்றேன்.

நான் ஓர் கிறிஸ்தவனே எனினும் ஸ்ரீமான் முதலியாரிடம் எனக்கு மிருந்த மதிப்பும் அவரின் மரணத்திற்காக அளவிறந்த அநுதாபமும் உண்டு. எனவே அன்னவரின் ஆன்மா நித்திய இளைப்பாற்றியை யடையுமாறு எல்லாம் வல்ல பரமனை இறைஞ்சுகின்றேன்.

சே. மிக்கேல் பேர்னாந்து.

குறிப்பு:—இது போன்ற அநுதாபங்கள் அன்பர்களிடமிருந்து பல வருகின்றமையால் அவற்றை யெல்லாம் வெளியிட ஆனந்தனில் இடமில்லை.

பத்திரிகாசிரியர்.

---

திருவண்ணாமலை, ஈசானியமடம் உயர்திரு, மகாதேவ சுவாமிகளின் சீடரும், தமிழ்நாடெங்கும் பெரும் புகழ்பெற்றவருமாகிய

# திரு, ஆரணி குப்புசாமி முதலியார்

## அவர்களின் பிரிவாற்றாமைக்கிரங்கி

திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையின் உதவி அமைச்சரும் மணிவாசகத் தமிழகத்தின் அதிபருமாகிய

## திரு, கி. ஆ. பெ. விசுவநாதபிள்ளை யவர்கள் கூறிய

# இரங்கற்பாக்கள்.

---

அந்தோ! வந் தோ!வென்ன அநியாய மநியாய மந்தகன் றான்
முந்தோமுக் குரைவிரித்த முருகனிகர் கட்டழகன் முதல்வன் றானே
தந்தோதுந் திருவுளத்தான் ஆரணியூர்த் தமிழ்ப்புலவன் தரணி போற்ற
வந்தோங்கு நலக்குப்புச் சாமிதனை வாய்மடுத்த வன்மை தானே! (1)

ஆங்கிலநற் றமிழென்னும் அருங்கடல்க ளிரண்டினையும் ஆழங்கண்டே
ஓங்குதிரு யோகமுதல் ஞானமெலாங் குவித்தெடுத்திவ் வுலகுக் கீந்து
பாங்குமிகு புகழ்படைத்த நற்குப்புச் சாமியெனும் பாவலோனே!
ஈங்கெவரும் போற்றுபுகழ் அண்ணாவோ! எங்கொளித்தாய்? இயம்புவாயே!

நம்பெரிய திருநாடு முன்னேற உளத்தெண்ணி நாளும் நாளும்
உம்பரமு தனையதிருத் தமிழ்நாவல் பலவெழுதி உலகுக் கீந்தோய்!
செம்பொருளைக் காண்புலவ திருக்குப்புச் சாமியுனைத் தேவ ரூர்க்குக்
கம்பமத வெண்களிற்றோன் கதைசொலவோ எடுத்தகன்றான்? கழறு
[வாயே! (3)

ஞானநில மெனும்பெரிய நாவலந்தீ வத்துதித்த நமது மாதர்
மானமிகு நாணமுதல் நாற்குணமுங் கற்புநனி வதியப் பெற்றே
ஈனமிலா திருக்கவுழைத் தருள்குப்புச் சாமியெனும் எங்கள் அண்ணா !
வானுலகம் நீயேகி மண்ணுலகோர் மிகவேங்க வைத்தல் நன்றோ ? (4)

அவனியெலாங் கொண்டாடும் ஆனந்த போதினிக்கண் ஆய்ந்துதேர்ந்து
கவனமொடு கட்டுரைகள் பலதந்து பலப்படுத்திக் கவினச் செய்த
புவனமுறை திருக்குப்புச் சாமியெனும் புலவாவோ ! புலவர் நாடு
தவநினைந்து நடந்தனையே! ஈதழகோ? இதுமுறையோ? சாற்றுவாயே! (5)

சிவவேடப் பொலிவழகோய் ! சிவனடியே சிந்திக்குஞ் சீரியோனே !
தவமாகும் நினதுநெறி கண்டுநமன் நின்பாலுஞ் சாருவானோ ?
அவமாமுன் பட்டவுதை மறப்பானோ ? கைவல்ய அருநூற் கிங்கு
நவமாக வுரைதருகுப் புச்சாமி சென்றதுநீ நம்பன்நாடே ! (6)

வெண்பா.

* சமைமதிரத் தாட்சிதை சார்பன்னி ரண்டில்
† அமைதிதியுத் ராடத்தே ஆம்நாள்—‡ இமைசனியில்
§ அப்புச்சார் வேணிபதம் ஆய்ந்தடைந்தா ரணியூர்க்
குப்புச்சா மிப்பெரியோன் கூர்ந்து. (7)

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(278-ம் பக்கத் தொடர்ச்சி.)

மர எழுதகம் அப்படியே திறந்துகொண்டதே பவானி மிக்க ஆச்சரிய மடைந்து சற்றுநேரத்தில் தைரியமடைந்து அவ்வழியே நுழையத் தொடங்கினாள். உள்ளே சென்றதே சுவருக்குள்ளாகவே ஒரு படிக்கட்டு மேல்நோக்கிச் செல்வதைக் கண்டு அவ்வழியே யேறினாள். மேலேறியபின் அங்கொரு வாசற்படி யிருந்தது. அது பூட்டப்படாதிருக்கவே அதைத் திறந்துகொண்டு சென்றாள். அங்கு இருளடைந்த ஒரு பெரிய அறை யிருந்தது.

அங்கு சென்றதே அவள் பயமும் கலவரமுமடைந்து அசந்து நின்றாள். அச்சமயம் ஒரு ஆச்சரிய சம்பவம் நேர்ந்தது. அதாவது சற்று தூரத்தில் மினுக்கென்று ஒரு தீபவொளி தெரிந்தது. அது இரண்டொரு விநாடிகளில் மறைந்துவிட்டது. அதோடு ஒருவிதமான சந்தடியும் கேட்டது.

உடனே அவள் மனம் திடுக்கிட்டுப் பிரமையடைந்தாள்.

இந்த விடத்தில் நாம் மட்டும் இல்லை. இங்கு இன்னும் யாரோ இருக்கிறார்கள் என்று அவள் மனதிற்பட்டது. ஆகையால் இன்னும் துணிந்து

---

* சமைமதி-பொருந்தியமாதம்.

† அமை—அமாவாசி. ‡ இமை-விளங்குகின்ற. § அப்பு-நீர் ; கங்கை.

முன்செல்ல அவளுக்குப் பயமாய்விட்டது.

சற்றுநேரம் பேசாமல் அங்கேயே நின்றாள். தான் நாடிவந்த ஆசாமியால் அச்சத்தம் நேரிட்டதாயின் சரிதான். அப்படிக்கின்றித் தன் விரோதிகளில் ஒருவராயிருந்து தான் அங்குவந்ததை யவர்கள் கண்டுகொண்டால் தன் பிராணன் கட்டாயம் போய்விடும். என்னசெய்வாள் பாபம்!

சுமார் பத்து நிமிடங்கள் திப்பிரமையடைந்து அசையாமல் நின்றாள். பிறகு ஒருவித தைரியமடைந்து எந்த உண்மையும் தெரிந்துகொள்வதே சரியென்று தீர்மானித்துக்கொண்டு,

“அம்பாலிகை !” அம்பாலிகை !” என்று மெதுவாய்க் கூப்பிட்டாள். ஒரு சந்தடியுமில்லை. அதன்மேல் பின்னும் சற்று கெட்டியாய்க் கூப்பிட்டாள்.

அப்போது “யாரது ?” என்று ஒரு மெல்லிய சத்தமுண்டாய்விட்டது.

பவானி:—“யார் பதில்கூறுவது ? குழந்தாய் நீயா ?” என்றாள்.

“யாரது பவானியின் குரலா கேட்பது ? என்று மெல்லிய ஸ்திரீயின் குரல்போல் பதில் கேட்டது.

பவானி “ஆம்” என்றாள்.

உடனே அதே குரலால் “இதோ இந்தப்பக்கம்வா” என்று பதில் கேட்டதே பவானி அத்திக்கே சென்றாள்—கடைசியில் தான் ஒரு உருவத்தின் அருகில் நிற்பது தெரிந்தது.

“குழந்தாய் ! நீயா? ” என்றாள்.

பதில் கிடைக்கவில்லை. ஆனால் மெதுவாய் ஒருவர் தன் தோளைப் பற்றுவதுபோல் தெரிந்தது.

பவானி:—“கடவுளே ! குழந்தாய் ! கடைசியில் உன்னைக் கண்டுபிடித்துவிட்டேன் ” என்றாள்.

உடனே “ஆகா ! என்னைக்கண்டு பிடித்துவிட்டாய் ” என்று கடுமையான வேறு குரல்கேட்டது.

அதைக்கேட்டதே பவானி இடிவிழுந்த நாகம்போல் பதறி,

“அட தெய்வமே ! நீயார்? ” என்று கூறிக்கொண்டே தன் கையையிழுத்துக்கொள்ள முயன்றாள்.

ஆனால் அவள் கை இரும்பு போன்ற கரத்தால் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்ளப்பட்டதும் “நான்தான் ” என்று பதில் கிடைத்தது.

மறுபடி “நீயார் ?” என்றாள்.

“மலையாளி ” என்று பதில் வந்தது.

இதைக்கேட்டதே அவள் கூச்சலிட முயன்றாள். வாய்திறக்கவே முடியவில்லை. அவள் தேகமே ஸ்தம்பித்துவிட்டது. அச்சமயம் மலை

யாளி அவள் காதினருகில் "பத்திரம் கூச்சலிட்டாலோ உன் உயிர்போய் விடும். இந்த ஈட்டி யுன் இருதயத்திற்குள் நுழைந்துவிடும்" என்ருன்.

**பவானி:**—"அய்யோ! என்னைக் கொல்லாதே" என்று அலறினுள்.

**மலையாளி:**—இங்கேன் வந்தாய்?

**பவானி:**—அம்பாலிகையைத் தேடி வந்தேன்.

**மலை:**—இறந்தவளைச் சுடுகாட்டிலல்லவோ தேடவேண்டும். இங்கேன் வந்தாய்?

**பவானி:**—அம்பாலிகை இறந்துபோகவில்லை. உயிரோடிருக்கிருள்.

**மலை:**—அவள் உயிரோடிருக்கிருளென்று யார் கூறியது?

**பவானி:**—யாருமில்லை. எனக்குத் தெரியும்.

அதற்குள் பவானி திகிலையும் பயத்தையும் மறந்துவிட்டாள். அவளுடைய தைரியம் வந்துவிட்டது. துணிகரமடைந்து விட்டாள். அவளிடம் மடியில் ஒரு கைத்துப்பாக்கியை ஆயத்தமாய் வைத்துக்கொண்டிருந்தாள்.

அதை யுபயோகிக்கவேண்டிய சமயம் வந்துவிட்டதென் றுணர்ந்து தன் கரத்தைத்தூக்கி இடுப்பிலிருந்த துப்பாக்கியை மெதுவாய் எடுக்க முயன்ருள். மலையாளி யதை யெப்படியோ அறிந்து,

"என்ன செய்யப்போகிருய்?" என்ருன்.

**பவானி:**—"என் கரத்தை விட்டுவிடு" என்ருள்.

**மலையாளி:**—ஒரு நிபந்தனையின்மேல் நீ யுன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

**பவானி:**—நீ யென்னை யென்ன செய்யச் சொல்கிருய்?

**மலை:**—நீ யென்னென்ன சங்கதிகளை வெளியிட்டிருக்கிருய்? யாரிடம் வெளியிட்டாய்? எல்லாவற்றையும் கூறிவிடு.

**பவானி:**—"அதைப்பற்றி யொரு வார்த்தையாவது கூறுவதன் முன் என் பிராணனையே விட்டுவிடுவேன்" என்ருள்.

தைரியசாலியாகிய அம்மாது மறுபடி தன் துப்பாக்கியை யெடுக்க முயன்ருள். உடனே அத்துஷ்டன் அவளுடைய இருகரங்களையும் பிடித்து முன்னுக்கிழுத்து மணிக்கட்டுகளை யொன்ருகச் சேர்த்து அவன் இன்னது செய்கிருனென்று அவள் உணர்வதற்குள் அவள் கரங்களில் விலங்கு பூட்டிவிட்டான்.

அத்துஷ்டன் அவள் தன்னிடம் சிக்கிக்கொண்டாள் என்று நிம்மதியோடு விளக்கேற்றினுன்.

பவானி அந்த இரகசியவழியில் நுழைந்தபின் அவன் பின்னுல் சென்று இருண்ட அறையில் அவளைக் கடந்து முன்னே சென்று ஸ்திரீயின் குரல்போல் அபிநயம் செய்து அவள் தன் கையில் சிக்கும்படி செய்து

கொண்டான். அங்கு என்ன சந்தடி நேர்ந்தாலும் வெளியில் கேட்காது. ஆகையால் "அங்கு அவளைப்பயப்படுத்தினால் உயிருக்குப் பயந்து எல்லாச் சங்கதியும் வெளியிட்டுவிடுவாள்; அதன் பிறகு கொன்றுவிடலாம்" என்பதே அவன் தீர்மானம். அதனால் அவள் இரகசிய அறையிலேயே மடியப்போகிறவளாதலால் அதன் வழியை அவள் தெரிந்துகொள்வதில் நமக்கொரு கெடுதியுமில்லை யென்று நினைத்துத்தான் அவளைத் தடை செய்யவில்லை. ஆனால் அவள் தைரியம் அவனுக்குத் தெரியாது.

அத்துஷ்டன் ஒரு ஈட்டியைக் கையில் பிடித்துக்கொண்டு "யாவற்றையும் கூறுகிறாயா இல்லையா ?" என்றான்.

பவானி:—"அட துஷ்டனே ! நான் உன்கையில் சிக்கிக்கொண்டேன் என்பது எனக்குத் தெரியும். உன் எண்ணமும் தெரியும். என் உயிர் எப்படியும் போகிறது போகட்டும். உங்களை யதோகதியாக்க என் நண்பர்கள் ஆயத்தமாயிருக்கிறார்கள். அவர்களுக்குத் தோல்வி யுண்டாக்கும் வண்ணம் ஒரு வார்த்தையாவது கூறுவேனென்று கனவிலும் நினையாதே" என்றாள்.

அவளுடைய தைரியம் எள்ளளவேனும் குறையவில்லை. மலையாளிக்கு நம் எண்ணம் நிறைவேறாதென்று நன்றாய்த் தெரிந்துவிட்டது. அதனால் மிக்க கோபமுண்டாயிற்று.

"நீ அம்பாலிகையைக் காணத்தானே இங்குவந்தாய் ?" என்றான். பவானி ஆம் என்றாள்.

மலை:—அவள் இங்கிருக்கிறாள் என்று உனக்குத் தெரியுமோ ?

பவா:—எனக்குத் தெரியாது.

மலை:—நீ யொப்புக்கொள்ள மாட்டாயோ ?

பவா:—நீ தான் ஒப்புக்கொள்ள வேண்டும்.

மலை:—நான் எதை யொப்புக்கொள்ள ?

பவா:—அச்சுதனைக் கொன்றாயே அதை.

இதைக்கேட்டதே மலையாளிக்கு அடங்காக் கோபம் வந்துவிட்டது. ஓங்கி அவள் முகத்தின்மேல் ஒரு குத்துக் குத்தினான்.

பவானியின் கைகளில் விலங்கு பூட்டப்பட்டிருந்ததால் அவள் சமாளித்துக்கொண்டு நிற்கவும் முடியாமல் வீறிட்டலறித் தடாலென்று பூமியில் விழுந்தாள்.

---

## 9-வது அத்தியாயம்.

பவானி கீழே விழுந்ததே மறு நிமிடம் ஒரு உருவம் மலையாளியின் எதிரில் வந்து நின்றதும்,

"அடே துஷ்டா ! என் எச்சரிக்கையைக் கூட கவனியாமல் இன்னொரு கொலைசெய்யவா துணிந்தாய்?" என்று சுபாவமான குரலாய்க் கூறியது.

(தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

**ஆகார நிக்கிரக விரதம்:**—மழை இல்லாத காரணத்தை முன்னிட்டு, உலக க்ஷேமத்தை யுத்தேசித்து, கோயம்புத்தூர் ஜில்லா, பல்லடம் தாலூகா, வரக்குட்டைப்பாளையம் கிராமத்தில் கம்மவார் மரபினரான ஜெயராமசாமி நாயக்கர் என்பவர் சென்ற இரக்தாக்ஷி வருஷம் 15-ந்தேதி திருவோண நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் ஸ்ரீமந்நாராயணரைக் குறித்து அன்ன ஆகாரமின்றி ஆழ்ந்த தியானத்தில் இருந்து வருகிறார். பிரதிதினமும் தேவார்ச்சனை முதலிய தெய்வவழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. இதற்கு அவ்வூரிலுள்ள ஸ்ரீநிவாச நாய்க்கர் சகாய புருஷ ராயிருக்கிறாராம்.

*　　*　　*　　*　　*

**தீ விபத்து:**—அம்ருத சரவில்=14-1-25 இரவில் குருதயாப்சிங் கம்பெனியில் தீ விபத்து நேரிட்டு 50 ஆயிரம் பெறுமான சாமான்கள் தீக்கிரையாயினவாம். அதன் பக்கத்துக்கட்டிடமும் எரிந்துபோயின வாம். காரணம்—மின்சாரக் கம்பியில் உண்டான கோளாறு என்று சொல்லப்படுகின்றது.

*　　*　　*　　*　　*

**காணாமற்போயிற்று:**—அதிக விலை யேறப்பெற்ற ஆபரணங்களடங் கிய இரும்புப்பெட்டி யொன்று கர்லிக்கும் கொள்பிட்டிக்கும் மத்தியில்ரயி லில் சாமான் ஏற்றும் வண்டியிலிருந்து காணாமற்போயிற்றாம். இப்பெட்டி பிளவர்ரோட் மிஸ்டர் ஏ. ஜி. எட்வர்ட் என்பவருக்குச் சொந்தமாம்.

*　　*　　*　　*　　*

**மோட்டார் ஆபத்து:**—சென்ற புதவாரம் புறக்கோட்டை 5-ம் நெம்பர் குறுக்கு வீதியிலிருக்கும் கே. யல். பெரைரா என்பவரது மோட் டார்வண்டியால் சிங்களனொருவன் காயமடைந்தான். உடனே அவனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோயினர். அவன் அங்கிருக்க விரும்பவில்லை யாம்.

*　　*　　*　　*　　*

**வடகலை தென்கலைச் சண்டை:**—இச்சண்டை மறுபடியும் ஸ்ரீரங்கத் தில் முளைத்திருக்கின்றது. கோர்ட்டு விவகாரமும் பலமாக நடையாடி வருகின்றது. இத்தன்மையான வழக்குகள் ஒழிந்தபோதுதான் நமது நாடு க்ஷேமமடையும்.

*　　*　　*　　*　　*

**ஒரு ஜோசியம்:**—மகாத்மா காந்தியடிகள் 5-2-24-காலை 7-மணிக்கு சிறைச்சாலையினின்றும் விடுதலை பெறுவார் என்றும் 1931-ல் ஸ்வராஜ்யம் வருமென்றும் 1923-ம் வருஷம் நவம்பர் மாதம் 8-ந் தேதி மித்திரனில் வெளியிட்டிருந்த ஜோஸியப்படி மகாத்மா விடுதலை யடைந்தார். அது போலவே ஸ்ரீ ஆஞ்சநேயர் கிருபையால் 1931 ம் வருஷம் மார்ச்சு மாதம் ஸ்வராஜ்யம் ஸ்தாபனமாகும் என்றும் அது மகாத்மா காந்தியடிகளாலல்ல வென்றும், அப்போது அவர் மௌன நிலையிலிருப்பாரென்றும், அவருடைய ஆத்மசக்தி எதை விரும்புகிறதோ அது 1930 ம் வருஷத்திலேயே முடிவு பெறுமென்றும், மாட்சிமை பொருந்திய அரசாங்கத்தாராலேயே அது தரப்படுமென்றும், பிராமணரல்லாத கனவான் ஒருவர் அதற்குக் காரண மாவாரென்றும், அக்காலத்தில் எவ்விதக் கிளர்ச்சியும் உண்டாகாதென் றும், ஹிந்துக்களுக்கும் மகம்மதியர்களுக்கும் 1926-ம் வருஷத்தில் பிரபல மான மனஸ்தாபங்களுண்டாகுமென்றும், 1928-ம் வருஷம் ஜனவரி மாத முதல் இவ்விருதிறத்தாரும் ஒற்றுமை பெறுவரென்றும் ஒருவர் ஜோசியம் கூறுகின்றார்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**இரக்தாக்ஷி௵ பங்குனி௴—கலியுகாதி 5026 சாலிவாகனம் 1847,**

**பசலி 1334—கொல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1343,**

**இங்கிலீஷ் 1925௵ மார்ச்சு௴—ஏப்ரல்௴**

| பங்குனி | மார்ச்சு | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | சது26-55 | சுவா32-28 | அ32-28சி | சம்பத்கௌரி விரதம் |
| 2 | 15 | ஞா | பஞ்23-0 | விசா18-30 | மர60 | |
| 3 | 16 | திங் | சஷ18-35 | அனு27-35 | சித்60 | |
| 4 | 17 | செ | சப்13-53 | கேட்24-30 | ம24-30அ | |
| 5 | 18 | புத | அஷ்8-45 | மூல21-10 | ம21-10அ | |
| 6 | 19 | வியா | நவ 3-23<br>தச57-50 | பூரா17-35 | சித்60 | |
| 7 | 20 | வெ | ஏ52-20 | உத்13-53 | சி13-53ம | |
| 8 | 21 | சனி | துவ46-55 | திரு10-13 | சித்60 | |
| 9 | 22 | ஞா | திர41-58 | அவி6-35 | ம6-35சி | |
| 10 | 23 | திங் | சது37-10 | சதை3-25 | சி3-25ம | |
| 11 | 24 | செ | அ● 33 18 | பூரட்0-55<br>உத்59-13 | மர0-55அ | அவமாகம் அமாவாசை |
| 12 | 25 | புத | பிர30-33 | ரேவ58-40 | மர60 | சைத்ரசுத்தம் யுகாதி பண்டிகை [பம் |
| 13 | 26 | வியா | து29-8 | அசு59-40 | அ59-40சி | உபநயனம், வித்தியாரம் |
| 14 | 27 | வெ | திரி29-15 | பர60 | சித்60 | ஆண்டோளன் |
| 15 | 28 | சனி | சது 31-10 | ப.※.2-20 | சித்2-20அ | கிருத்திகை கரிநாள், |
| 16 | 29 | ஞா | பஞ் 34-40 | கிரு6-30 | சித் 60 | கூர்மகல்பாதி |
| 17 | 30 | திங் | சஷ்39-40 | ரோ12-18 | அமி60 | சஷ்டிஉபவாசம் |
| 18 | 31 | செவ | சப்45-40 | மிரு19-10 | சி19-10ம | கங்கோற்பத்தி |
| 19 | ஏப்ரல் 1 | புத | அஷ்52-5 | திரு26-48 | சித்60 | கரிநாள் பவாண்யுத்பத்தி |
| 20 | 2 | வியா | நவ58-23 | புன34-18 | அமி60 | ஸ்ரீராமநவமி. ஸ்ரீராமஜெ |
| 21 | 3 | வெ | தச60... | பூசம்41-33 | மர60 | திருதினஸ்பிருக் [யந்தி |
| 22 | 4 | சனி | தச3-50 | ஆயி47-30 | ம47-30அ | |
| 23 | 5 | ஞா | ஏ7-50 | மகம்51-55 | ம55-55சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 24 | 6 | திங் | து10-18 | பூரம்54-50 | சித்60 | பிரதோஷம், மதனதமன த்திரயோதசி |
| 25 | 7 | செவ் | திர10-55 | உத்55-45 | அ55-45சி | பங்குனி உத்திரம், |
| 26 | 8 | புத | ச○9-55 | அஸ்55-10 | ம55-10சி | பௌர்ணமி |
| 27 | 9 | வியா | பௌ7-28 | சித்53-20 | சி53-20அ | வாகனமேற, பும்சவனம் |
| 28 | 10 | வெ | பிர3-25<br>துதி58-38 | சுவா50-30 | சித்60 | சைத்ரபகுளம்,அவமாகம் |
| 29 | 11 | சனி | திரி53-15 | விசா46-58 | சித்60 | கோடியுடுக்க, மாடுவாங்க |
| 30 | 12 | ஞா | சது47-28 | அனு43-5 | மர60 | |
| *1 | 13 | திங் | பஞ்41-40 | கேட்39-8 | சித்60 | மேஷரவி நா 5-58 |

| | | | |
|---|---|---|---|
| சூரி புத | செ | | |
| சுக் | 9௳ மீன-சுக்<br>13 ,, மேஷ-பு | | ராகு |
| கே | | | |
| குரு | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS